*Kumaran*

*Āram 4, muttu 16*

*December 02, 1926*

Record no. 313

Registered No. M. 1823.

உ
சிவமயம்.

"KUMARAN" Karaikudi

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

வியாழன்தோறும் வெளியிடப்பெறுவது.

"கதரே உயிர்."

"கருணேயே தெய்வம்."

ஆரம் ௪. } காரைக்குடி. அட்சய-ஹு கார்த்திகை-மீ கஎ-உ (2—12—26) { முத்து ௧௩.

16

உலகம் உயர்ந்தோரைக் குறிக்கும் என்பது நம்மவர் கொள்கை. பெரியோர் யார்? அவர்கள் தோற்றம் எத்தகையது? அவர்கள் எவ்வாறு தம்மை உருவாக்கிக் கொள்ளுகின்றார்? அன்னார் உலக சரித்திரத்தை எவ்வாறு உருவாக்குகின்றார்? அவர்களைக் குறித்து மக்கள் எத்தகைய கருத்துக்கள் கொண்டுள்ளார்? அவர்கள் செய்யும் செயல் எத்தகையது? இத்தகைய வினக்களுக்கெல்லாம் விடையளிப்பது எளிதன்று. உலக சரிதமென்பது சாராம்சத்தில் உலகத்தின்கண் உழைத்து வாழ்ந்த உயர்ந்தோர் சரிதமாகும். மக்களது தலைவராக, முன்மாதிரியாக, உலகத்தின் வழிகாட்டிகளாக விளங்கியுள்ள பெரியோரே உயர்ந்தவராவர்; உத்தமராவர்.

* * *

'இருள் தரு மாஞாலம்' என்று கூறப்படுவது இவ்வுலகம். இவ் இருளுலகின்கண், இருள் கிழித்தொளிரும் மின்னென விளங்குவோர் உயர்ந்தோராவர். இவர்களில் சிலர் ஒருகணம் தோன்றி மறுகணம் மறையும் மின்னல் போலவும், வேறு சிலர் குன்றின்மேல் எற்றிவைத்த தீபம் போலவும் சுடர்கின்றார். கலியிருள் நீக்க வானம் எடுத்த கைவிளக்கென்ன ஒளிர்வோர் வீரபுருஷர்—அவதார மூர்த்திகள். வீரருட் சிலர் வேந்தராகின்றார். இன்னும் சிலர் பேராசிரியராக—பேரறிவாளர்களாக மிளிர்கின்றார். வேறு சிலர் சமய ஞானிகளாக விளங்குகின்றார். இன்னும் கவிச் சக்கரவர்த்திகளாக விளங்கும் வீரர் மிகமிகச் சிலராவர். சிலர் தீர்க்க தரிசிகளாகக் காட்சி தருகின்றார். இன்னும் சிலரோ லட்சிய புருஷராகஅவதார மூர்த்திகளாகப் பரிணமிக்கின்றார். இங்ஙனம் ஆறு வகைகளாக வீர புருஷர்களை கார்லைல் என்னும் ஆசிரியன் வகுத்துக் கூறுகின்றான்.

* * *

எண்ணங்களினின்றும் செயல்கள் பிறக்கின்றன. உணர்ச்சியினின்றும் எண்ணங்கள் பிறக்கின்றன. அகமே புறமாக விரிகின்றது. உள்ளமே செயலாகப் பரிணமிக்கின்றது. எனவே வீரம் உள்ளத்திலே தோன்றி உடம்பிலே, உதிரத்திலே செயலிலே, பொங்கிப் பாய்ந்து வெள்ளமிடுகின்றது. வீர உள்ளம் வீர வாழ்க்கையாக விளைகின்றது. உள்ளத்தைப் பண்படுத்தி நல் விருப்பினை விதைத்தல் வேண்டும். பொறுமை நீர் பாய்ச்சித் தன்னம்பிக்கையினை வளர்த்தல் வேண்டும். தன்னை அறிந்து தன்னடக்கம் கொண்டு செந்நெறி நின்று பிறரையும் அந்நெறி செலுத்தி அறம் வளர்க்க முற்படுதல்

## வீரர் வழிபாடு.

(பி. ஸ்ரீ.)

வேண்டும். இதுவே மெய்யான வீரம். ஆன்ம சக்தி மனோசக்திகளே தூல சக்திகளைப் பார்க்கிலும் வலிமை வாய்ந்தனவாகும். எனினும் உடல் வலிமையும் வளமும் வீரனுக்கு இன்றியமையாதனவே.

* * *

வீரன் தெய்வமாக, அவதாரமூர்த்தியாகக் காட்சி தருவதற்கு ஓர் உதாரணமாக இராமன் கதையினையே காட்டலாம். இராமாயணம் ஓர் அழகிய வீரசரிதமாகும். இராமன் கேவலம் போர்வீரனல்லன். ஓர் உண்மையான—ஓர் உத்தமனான —தரும வீரன். அறம் தலை நிறுத்தி உலகினைச் செந்நெறி செலுத்த இராமன் ஈண்டுப் பிறந்தனன் என்று இதிகாசம் கூறுகின்றது. இன்னும் புத்தர் சரிதத்தினை உற்று நோக்குவோம். 'அறங்கிடந்த சிந்தையராய் ஆசையெலாம் துறந்த அதிவீர'ருள் புத்தர்பிரான் ஓர் முடிசூடா மன்னராக விளங்குகின்றார். இத்தகைய வீரபுருஷனை மக்கள் தெய்வமாகவும் அவதார மூர்த்தியாகவும் கருதி வழிபடுவது ஓர் ஆச்சரியமன்று. இன்னும் கிறிஸ்துவைப் பாருங்கள்.

வள்ளல் குருபரன்
மன்னுயிர்க்காத்தன்னுயிரை
எள்ளி அவதரித்த
எம்மான் சருவேசன்
கொள்ளை புரிந்து
கொலை தீர்ப்புப்பெற்றுவரு
கள்வர் இருவரொடும்
கல்வாரி நோக்கினர்.

மன்னுயிர்க்காகத் தன்னுயிரை உவந்தளித்த இயேசு பெருமான் வீருள் வீரன்றோ? உயிர்கொடுக்கும் வள்ளன்மை, உடைமைகளை வரையாதளித்த தலையெழு வள்ளல்தம் வள்ளன்மையினும் சிறந்ததன்றோ? முள்முடிச் சூட்டிச் சிலுவையிலறைந்து தன்னை இம்சித்த பாவியர் மீதும் இயேசு சீற்றம் கொண்டாரல்லர். "பரம பிதாவே! அவர்களை மன்னிப்பீராக; இன்னது செய்கின்றேமென்பதையே அன்னார் அறிந்தாரில்லை" என்று கிறிஸ்து இறைவனை நோக்கி மன்றாடியதாக விவிலிய நூல் கூறுகின்றது. இத்தகைய வீரமன்றோ கிறிஸ்துவை அவதார மூர்த்தியாக்கிவிட்டது!

வீரன் தீர்க்கதரிசியாக விளங்குவதற்கு மகம்மது எனும் நபிநாயகமே தக்க சான்றாவார். தங்கள் நபிநாயகத்தினை மகம்மதியர் தெய்வமாகவாவது அவதார மூர்த்தியாகவாவது வழிபடுகின்றாரில்லை. மகம்மது தெய்வ அருள் பெற்ற தீர்க்கதரிசி என்பது அன்னார் கொள்கை. அல்லாவைத் தவிர ஆண்டவனில்லை. மகம்மதுவே அவர் தம் நபிநாயகம்—என்பது மகம்மதிய சித்தாந்தம். கி. பி. ருஎ0-ம் ஆண்டில் மகம்மது பிறந்தார். பள்ளிப்படிப்பு இவருக்கில்லை. அரேபியா பாலைவனங்களில் வாழ்க்கையெனும் புத்தகத்தை மகம்மது ஓதியுணர்ந்தார். தியான வாயிலாக இவர் தம்முள் ஆழ்ந்து மூழ்கி அரும்பெரும் தெய்விக உண்மைகளைக் கண்டுபிடித்தார். மனமெய் மொழிகளில் இவர் உண்மை வடிவினராக இலங்கினர். சொற் செட்டோடு மௌன வாக்கின் தெய்வ வலியினை இவர் நன்குணர்ந்திருந்தார். இன்றியமையாத இடத்து விசேஷ வாக்கு வன்மையும் இவர்பால் அலையெறிந்து பொங்கியது. மகம்மது மகாவீர புருஷனாக விளங்கினர். இவரது ஆன்ம சக்தியே மகம்மதிய சமயமாக விரிந்துளது.

* * *

இனி வீரகவியைப்பற்றி ஒரு சிறிது ஆராய்வாம். தெய்வங்களாகவும் தீர்க்க தரிசிகளாகவும் விளங்கும் வீரர் ஜாதியினைச் சார்ந்தவருள் தெய்வமாக்கவிகள் தலைசிறந்து விளங்குவோராவர். மகாகவியும் உண்மையில் ஓர் தீர்க்கதரிசியேயாவான். ஆராய்ச்சியாளனுக்கு மெள்ள மெள்ள வெளிப்படும் உண்மைகள் மகா கவியின் கற்பனை உலகிலே பளிச் சென்றொளி வீசி முகம் காட்டுகின்றன. இத்தகைய தெய்வ மாக்கவிகளுள் மேலைநாட்டு ஷேக்ஸ்பியர் ஒருவர். நமது நாட்டுக் கவிச்சக்கரவர்த்தியான கம்பரும், தெய்வங்கள் தீர்க்க தரிசிகள் ஆகிய மகாவீர புருஷர்களின் இனத்தைச் சார்ந்தவரேயாவர். வீரன் தெய்வமாக விளங்குவதற்கு இராமன் சான்று தருகின்றானெனில், வீரன் மகா கவியாக விளங்குவதற்குக் கம்பன் தக்க சான்று தருகின்றான். ஷேக்ஸ்பியரும் கம்பரும் கவிதா தேவியின் முடிமணிகளாவர். இவர்களோடு ஒப்புடையார் யாருமில்லை. இவர்களுக்கு இரண்டாவதாக மதிக்கப்பெறும் மகா கவிகளும் உலகில்லை. இயற்கையும் மக்களுள்ளமுமே ஷேக்ஸ்பியர் விரும்பிப் பயின்ற பெருநூல்களாகும். கம்பரோ இவற்றோடு 'தென் சொற்கடந்து வட சொற்கடலு'க்கும் எல்லைதேர்ந்து விளங்கினர். கவிதா சந்தத்தில் ஷேக்ஸ்பியரும் கம்பரும் நிகரற்று விளங்கினர். ஆனால் ஷேக்ஸ்பியருக்கு வசமாகாத இசை வெள்ளம் கம்பர்பால் அலைமேல் அலை யெறிந்தொழுகின்றது. ஷேக்ஸ்பியர் தமது நாடகங்களில் இயற்கையுண்மைகளைக் கண்ணாடியில் எடுத்துக்காட்டுவதுபோல இனிது காட்டுகின்றார். கம்பரோ ஷேக்ஸ்பியரது நாடகத்திறமையோடு தமிழ்ப்பெருமக்களுக்கு ஓர் வீரகாவியத்தினை இயற்றித் தந்தார். மகாவீரகவிகளான ஷேக்ஸ்பியரும் கம்பரும் மக்கள் மதிநலத்தின் வரம்பு கடந்த தெய்வமாக்கவிகளாவர்.

* * *

இம்மண்ணுலகில் அறியாமை யிருள் பூசிவரும்மக்களிடையே மெய்ஞ்ஞான சூரியர்களாகத் திகழும் சங்கரர், இராமாநுஜர், மெய்கண்டார், லூதர், முதலான பெரியோர்களும் வீர புருஷர்களேயாவர். உலகமெலாம் ஒருயிரொன்னும் அத்வைத ஞானத்தை முதற்கண் நிலைநாட்டிய பெரியார் சங்கரரேயாவர். ஐயத்திரிபுகளை ஞான வாளால் அறுத்துத் தள்ளிய ஆதி சங்கரர் வீரருள் வீரரேயாவர். ஆன்ம விடுதலையின் பொருட்டு ஒருவன் உலகத்தையே துறந்துவிடலாம் என்று போதித்த வீரர் சங்கரரெனின், உலகமுன்னேற்றத்தின் பொருட்டு ஒருவன் தன் ஆன்மாவையும் இழந்துவிடலாமென்று உபதேசித்த வீரர் இராமானுஜர் ஆவர். சிவமெனும் செம்பொருள் காணும் ஞானக் கண்ணாடியாகிய சிவஞான போதத்தினைத் திட்ப நுட்பம் செறிந்த சில சூத்திரங்களில் அடக்கிக்காட்டும் மெய்கண்ட தேவரும் ஓர் உண்மை வீரராவர். பழைய கிறிஸ்து சமயத்தின் குறைகளை எடுத்துக் காட்டி, ஜகத்குருவான போப் என்பாரது சூழ்ச்சிகளை அஞ்சாது கண்டித்த லூதர் என்பாரும் ஒரு மகா வீரரேயாவர்.

* * *

உலக மக்களிடையே நல்லறிவுச்சுடர் கொளுத்தும் பேராசிரியரும் பேரறிவாளரும் வீரரினத்தைச் சார்ந்தவராவர். அறிவு தெய்வத்தன்மை வாய்ந்தது; இறைவனுக்கே உரியது. சுத்த அறிவே சிவமென்று மறைகள் முறையிடுகின்றன. எனவே, பேரறிவாளரும் பேராசிரியரும் தெய்வத்தன்மை வாய்ந்த—தெய்விக சக்தி பெற்றுள்ள வீரராவர். சிவபெருமான்

அருளிய செய்யுளிலும் 'குற்றம் குற்றமே' என்று கூறிய நக்கீரனது வீரம் அவதார மூர்த்திகளின் வீரத்திற்குச் சிறிதும் குறைந்ததன்று. எண்ணிறந்த மக்கள் உள்ளத்திற்கு இன்னமுதாகும் நன்னூல்களை இயற்றும் பேராசிரியர் தெயவத்தன்மையிலும் வீர உணர்விலும் தீர்க்கதரிசிகளுக்கு எட்டுணையும் இளைத்தவரல்லர். பேரறிவாளனது அறிவுச் செல்வம் நீர் நிறைந்த ஊருணியாகும். அள்ளி வழங்க வழங்க இவ் அறிவுச்செல்வம் குறைவுபடுதலில்லை. வழங்க வழங்கக் குறையாது வளர்ந்தோங்கும் அறிவுச்செல்வம் பொருட்செல்வத்திலும் மிகமிகச் சிறந்ததாகும். இத்தகைய 'கேடில் விழுச்செல்வ'த்தினை உலகினுக்கருளும் ஆற்றல் வாய்ந்த பெருமக்கள் வீரராவரென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

*  *  *

இனி, கர்ம வீரர்களைக் குறித்து ஒரு வார்த்தை. இவர்களே இயற்கையரசர். மணிமுடியும் சிங்காதனமும் இவர்களுக்கு அவசியமல்ல. மெலியாரை வலியார் இம்சியாது பாதுகாப்போரும், தம்மைச் சார்ந்தார்க்குத் தண்ணளி சுரந்து நிற்போரும் கர்மவீரராவர். சிவாஜி கர்மவீரர்களுள் ஒருவர். இவரது தன்னம்பிக்கைக்கு ஓர் அளவில்லை. இவரை ஓர் அவதார புருஷரென்றே அந்நாளில் பலரும் கருதுவாராயினர். இவர் தமது கத்திக்கு 'பவானி' என்ற காளியின்பெயரை அளித்திருந்தார். 'ஹர ஹர மகாதேவ' என்பது இவரது போர் முழக்கமாக இருந்தது. இம்முழக்கத்தின்முன் எதிரிகள் அஞ்சி நிலைகுலைந்தோடினர். இராஜபுத்திரவீரரும் கர்மவீரரேயாவர். ஆடவரைப்போலவே, இராஜபுத்திர ஸ்திரீகளும் மரண பயத்தினை வென்ற மகா வீரமணிகளெனத் திகழ்ந்தனர். "அச்சமென்றால் என்ன? அதனை யான் அறியேன்" என்று கூறிய நெல்சன் ஓர் உண்மையான கர்மவீரன். எப்பாடுபட்டாலும் குறித்த இலக்கினை அடைதல் கூடுமென்று நம்பிய நெப்போலியனும் ஓர் உயர்ந்த கர்ம வீரனே. இறைவன்பால் அதிகார முத்திரைபெற்று வந்ததாகக் கருதப்பெற்ற க்ராம்வெல் போன்றவர்களும் வீரபுருஷரேயாவர்.

*  *  *

வீரர் வழிபாடு மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாததாகும். வீரரை வியவாதார் இல்லை; வீரரை வழிபடாதவரும் இல்லை. இம்சை நெறியில் நிற்போரே வீரரென்பதில்லை. அஹிம்சா தர்ம வீரமூர்த்தியான நம் காந்தியடிகள் வீரரல்லரோ? வீரத்துள் தலையாய வீரம் சத்தியாக்கிரக வீரமேயன்றோ? வலிமையால் பிறர் பொருளையும் பிற நாடுகளையும் கவர்ந்துகொள்ளும் 'வீரம்' வீரமன்று. வலிமையே உரிமையெனும் கொள்கையினை விடுத்து, அன்பால், தியாகத்தால் உரிமைகொள்ள முயல்வோரே சிறந்தவராவர். கள் வெறியும் போர் வெறியும் கொண்டு களத்தே உயிர்விடுவது பெரு வீரமன்று. உண்மையினையே உறுதியாகப்பற்றி எதிரியின் இரத்தத்தில் ஒரு துளியும் சிந்தாது, தன்பால் வசையின்றி, பொறுமையோடு துன்பம் சகிக்கும் வீரமன்றோ வீரம்! இத்தகைய வீரமூர்த்திகளையேஇன்று இந்தியா வேண்டி நிற்கின்றது. இவர்தம் வீரச்செயல்களே நமக்கும் பிறப்புரிமையாகிய தன்னரசு நல்குவனவாகும். சட்டசபைகளில், பிரசங்க மேடைகளில், சொற்பொழிவு செய்யும் வாய்ச்சொல் வீரம் உண்மை வீரமாகாது. சொற்களால் பேசாது, செயல்களால் பேசுவோரே வீரபுருஷர். நமது நாட்டின் நல்லுயிரான இளைஞர்கள் வீரபுருஷர்களை வழிபடுதல் வேண்டும். இளமையும் வீரமும் தழுவிப்படர்ந்து நாட்டிற்குரிய நல்வாழ்வெனும் கனியாகக் கனிதல் வேண்டும்.

---

**ஆண்மையே : : :**
**: ஆடவர்க் கணிகலம்.**

---

### ஜாதி மத வேற்றுமையும்
# சமுதாய ஒற்றுமையும்.

திரு. எஸ். சோமசுந்தரபாரதி எம். ஏ., பி. எல்.

(சென்ற வாரத் தொடர்ச்சி.)

வலியும் வன்கண்மையுமற்ற படைக்குருவி ஆடு மானன்ன பிற வகுப்பின பலவுங் கூடிவாழ்வனவாம். ஊனுண்பவற்றுள்ளும், பிறவற்றை வருத்துதலி லின்பந்தேடா வியல்பினவெல்லாம் கூடிவாழத் தக்கனவேயாம். கள்ளக்காகமுங் குள்ளநரியு மிவ்வகுப்பின. உரமற்று இரைதேட உதவிவேண்டு மவசியத்தால்மட்டு முடனுறைந்து குரூரவியல்பு குன்றா தூனயன்னவை பசி தணிக்க வலிமெலிந்த தம்மவற்றையே அற்றந்தேடித் தின்னக் கொல்லும்; இரை கிடைத்துழி இனத்தையு மொதுக்கித் தாமுண்ணும்; இனையவற்றின் சமுதாய வாழ்வுதன்னலத்திற்கு வேண்டுமளவேயாகும்; உண்மைச் சமுதாய வாழ்வாகாது. சேர்ந்து வாழ்வதில் விருப்பமுடைய காகம், தன்னினத்தைக் கரைந்துண்ணும்; எனில், பிணமுகக்கு மிக்காகமும் தன்னினம் தின்னாது. ஆனால் உரமற்றுதவவேண்டி உடனுறையு மவசியமின்றியும், போதிய வலிவளம் படைத்தும், சமூகவாழ்க்கையி லின்புற்றுக் கூடிவாழும் யானைக்கூட்டத்திற்றான் ஒருசிறிது உண்மைச் சமுதாயவாழ்க்கை நலம் காணலாகும். இனிய கருப்பங்காடு கண்டபோதும், பிடியும்களிறும் இளையனவும் வலியற்றனவும் உண்ணவிட்டுப் பக்கல்நின்று பகைகாத்துக் குழுத்தழுவிப் பெருமிதங்கொள்ளும் அடற்கொம் பாண்யானைக்குணமும்; அதற் கடங்கி யுடனடக்கும் யானையினத்தின் ஒற்றுமையும், பகைகாணில் இனமொதுக்கிப் பொருதற்குத் தா முந்துறுக் திறல்யானைகளின் பெருங்குணமும், தன்னலங்குறைத்துச் சமூகநலம்பேணுஞ் சமுதாயவாழ்க்கைவளத்தை வளர்ப்பதாகும்.

மாந்தரும், புலி கழுகு போல்வாரும் ஓநாயன்னாரும் நரி காக நேர்வாரும் யானையினமொப்பவருமாகப் பலதிறப்படுவாராவர். தன்னயமன்றிப் பிறிதின்பமறியார், துணைவேண்டாவலியுடையார், சமுதாய வாழ்விகழ்ந்து இகந்த கபந்தன் இடும்பன் பகன்போன்ற தறுகண்மை அடலரக்கர் தனிவாழ்வார். விரும்புவனவனைத்தும் தாமே தேடியமைக்குந் திறனிலார், சமுகத்தாளாண்மையில் தன்னலந்தேடுவார், ஓநாய் நீர்மையர் சமுதாயவாழ் மகவாரேனும், அதன் நன்மைக்குழைக்க விழையார். இன்னவர் சமுதாயவாழ்க்கைநலம் அறியாராவர், தன்னல மறக்கொணாதார் இனத்தவர்கூட்டம் வேட்பார், காகமும் நரியும் போல இனம்பேணிக் கூடிவாழ்வாரேனும் உண்மைக்கூட்டுறவின்பம்உணரொணாதார் சுற்றத்தார்நலம்பேணும்விருப்பாற் சிறிது தன்னலக்குறைவு வெறுக்காத சமூகவாழ்வுடையார், யானையினமொப்ப, ஓரினத்தொருதுறை யொழுக்க வழக்கமுடையாரோடன்றிப் பிறருடன் நெருக்கவாழ்வை விரும்பார்; இவர் நேசத்திறம்இனத்தளவேயாமாதலால். இவர் உண்மைச் சமுதாய வாழ்க்கைநலத்தை யொருதிறத்துணர்ந்ததனைப் பேணுவரெனினும், விரம்பவிரியாத நேசநிலையும், தன்னலமறக்குந் தகைக்குறைவும் இவர்சமுதாயத்தைச் சுருக்கிக் கூட்டுறவின்பத்தைக் குறைக்கும். பற்றுக்காரணமற்ற அகன்ற அன்பும் தன்னலந்துறந்தும் பிறரின்பம்பேணும் பெருந்தகவும்விரும்பிவளர்ப்பார்சமுதாயங்களிற்றான் சமூகப்பொதுவாழ்க்கை இன்பத்தின் பெருக்கும் முதிர்ச்சியும் காணலாகும். விலங்கு புள்ளினங்களின் சமுதாயங்களெல்லாம், தத்த மினத்தளவில் எல்லைப்பட்டுநிற்கும். மக்கட்சமுதாயத்திலேதான் இனத்தெல்லைச் சிற்றளவையிகந்து, சமயப்பொதுமை ஜாதியொருமையாதி குறுகியகாரணப்பற்றைப் பற்றுக்கோடாக்காமல், இன்பதுன்பங்களைச் சமூகப் பொதுப்பொருளாக்கிச் சமுதாயத்தொவ்வொருவருடையவும்அனைவருடையவும் ஆக்கம்பெருக்கு முண்மையுயர் வாழ்வு சாத்தியமாகும். சிறி தாழச்சிந்திப்பார்க்கு, "மக்களனைவருமோரினத்தொருபெருவகுப்பினரேயாவர்; பறவை மிருகங்களிடைக்காணும்பிளவுபட்டவேறு பல் பெருவகுப்புக்கள் (genera) மாந்தரிடைக் கிடையா; மனித வருக்கமுழுதும் ஒரு பெருவகுப்பாகுமன்றி, உருவ வினை யுண வொழுக்கங்களில் ஒன்றொன்று வேற்றுமைகளாற் பிரிவுபட்டுள்ள விலங்கினங்கள் பறவைப்பகுதிகளைப்போன்ற வகுப்புவகை மாந்தரிடைக் கிடையாது," என்பது விசதமாகும். இணங்கொணாஇயற்கைவேறுபாடுகளாற் பிரிவுபட்ட புள்விலங்கினப் பெருவகுப்புக்களின் முக்கிய அடையாளம், இருவகுப்பின் இருபாலிரண்டின் கூட்டுறவுமுயக்கம் பயன்தராது; அதனால் அவற்றிடை இயற் பாலீர்ப்புமில்லை— (no natural sexual attraction) மக்கட்பெரும்பகுதியிலிவ்வித இயற்கைப் பிளவில்லை. எவ்விருபாலாருக்கும் மணமுமகப்பேறுமியல்பாகும். இதனாலு மனிதசமுதாயத்துக்கு இனவரையறையின்மை தெளியலாகும்.

கூட்டுறவை இயற்கைநெறிநலமாக் காதலியாமற் காரணக் கட்டுப்பாட்டளவில் மட்டுங் கூடிவாழ்வார், அவிழ்ந்தபொழுதகன்றோடும் நெல்லிக்காய்மூட்டை, களங்கடந்து தளத்தலைவன்கட்டளையுங் கழிந்தபொழுது பிரிந்தோடும் படைகள்போலக் கட்டளவிலேகூடிக் கட்டாயமில்லாதபோது விலகுபவர் கூட்டமேயாகும்; உண்மைச் சமுதாயமாகாது. சமுதாயங் கேவலமொரு வெறுங்கூட்டமில்லை; தனிவாழ்வுடையதொரு ஜீவியநிலையாம். ஜீவியநிலையுடைய ஒவ்வொன்றிற்குந் தனித்தொழிலுடைய பலவுறுப்புண்டு; ஆனால் உறுப்புக் கூட்டத்தைமட்டும் ஜந்துவாகக் கருத முடியாது. உறுப்புக்களினெருப்பட்ட தொழின் முடிவாகத் தனிவாழ்வுபெற்று நிற்பதே ஜந்துவாகும். அதன் வாழ்க்கைதான் ஜீவியநிலையாம். உறுப்புக்களின் தனிவினைமைஜீவ்யமாகாது; அதை வாழ்க்கையென்னும் வழக்குமில்லை. தனி உறுப்புக்களின் வினைமையின் வேறுய்ப் பலஉறுப்புக்களினொன்றிய வினைத்திரட்சியின் முடிவாய் அவற்றி னெருப்பாட்டினுருப்பாடாவதே அவ்வுறுப்புக்களாலாய ஜந்துவின் ஜீவ்யவாழ்வாம். அதுவேபோல், சமுதாயவுணர்சசியற்ற மாந்தர்கூட்டமெல்லாம் தனிவாழ்வுபெற்றுயிர்த்திலா வெறுங் கூட்டமேயாகும். உண்மைச்சமுதாயமாவது அதனவயவமக்களின் தனிவாழ்வின் வேறுய அவர்களி னொற்றுமையுணர்வின் முடிவாய் ஒருப்பட்ட தனிவாழ்வுடைய தொன்றும். நிலைபெற்றவுண்மைச் சமுதாயத்தைத் தனக்கொரு தனி ஜீவ்யநிலையுடைய ஜந்துவுக்கு ஒப்பிடலாம். அவயவவினைகளின் வேறுன தனிவாழ்வுடைய அவயவிபோலவே தன்னகவுறுப்பா மாந்தரின் தனிவாழ்க்கைக்கு வேறுத் தனக்கொரு தனிவாழ்வுடையதே சமுதாயமாம். அவயவியின்வாழ்வு எப்படி அவயவங்களினியல்புக்கும் தொழிலுக்கும் வேறுயினு மாறுபாடின்றிப் பொருந்திநிற்குமோ அப்படியே சமுதாயவாழ்க்கையும் அதிலுள்ள மக்களின் தனிவாழ்வுக்கு வேறுகிவிரோதமற்றிருக்கும். யாதொரு அவயவி தன்னவயவங்களின் தனிவாழ்வைக்கெடுப்பானே, அவன் கெடும் அவயவத்தளவு தன்வாழ்க்கையையும்கெடுப்பானாவான். அவயவமனைத்தும் தத்தந்தொழிலைத் தடையின்றி நடத்தி வளரச்செய்யுமவயவியே தன் பூர்ண வாழ்க்கையின் சம்பூர்ணசுகம் பெறுவானன்றோ? உறுப்புச்சில கெடினும் உறுப்புக்களின் வினைமை சிறிது குன்றினும், ஜந்துவின் ஜீவியம் சம்பூர்ணமாகாது. உறுப்புக்கள் வேறுபட்ட இயல்பும் வினையு முடையவைகளாகவே, யாதோருறுப்பு மிடல்புவினைமையில் தன்னிலை திரியின் அவயவியின் வாழ்வு மவ்வளவிலூறுபடும். பல திறப்பட்ட அவயவங்களின் வெவ்வேறுய வினை திரண்டே அவயவியின் வாழ்க்கைக்குயிருமழகும் தருவதாகும். சமுதாயவாழ்க்கையுமவ்வகைத்தே. ஒரு சமுதாயமக்களின் தனிவாழ்வ சிறக்கச் சிறக்கச் சமுதாய வாழ்வுஞ் சிறப்பதாகும். மக்களின் தனிவாழ்க்கையை ஊறுபடுத்திச் சமுதாயம் நன்மைபெறுது. தன்னவயவ மக்களெல்லாரு மொருவகைப்பட்டு வேறுபாடெதுவுமின்றியிருக்க விரும்பும் எந்தச் சமுதாயமும், தன் உறுப்புக்களெல்லாம் ஒரு தன்மைத் தாக்க விரும்பும் அவயவியைப்போல் நலிந்து கெடும். அவயவியின் வாழ்க்கைக்கு, எல்லாவுறுப்பு மவசியம். சிறந்ததாகக் கருதுங் கண்ணொன்றே கொண்ட ஜந்துவின் வாழ்க்கையென்னும்? காதும் மூக்கும் வேண்டாமா? கீழ்நின்று நடத்துங் காலில்லாத வாழ்வு முடவாழ்வன்றோ? உறுப்புக்களிற் கீழ்மேல் கிடையாது. அவயவியின் வாழ்க்கைக்கு அனைத்துறுப்பு மவசியமே. அவன் பாதுகாப்புக்கும் கவனத்துக்கு மனைத்துஞ் சரியுரிமை யுடையனவேயாம். சமுதாய நல்வாழ்வுக்கும், பல வேறுபட்ட நிலையுந் தொழிலும் வினைவுந் திறனுமுடையார் எல்லாரு மவசியமே; அவ்வனைவரையு மொப்பக்காத்துப் பேணுவதும் சமுதாயத்தின் கடமையாம். தொழில் மறந்திடர்த விரும் நாவைத் தன்தொழினடத்துழி ஊறுசெய்யும் பல்லும் ஊறுபடும் நாவும் தத்தம் தொழிலை முறையாற்றி ஒருவாயில் அமைந்து மாறின்றி அவயவியின் வாழ்க்கையை வளர்ப்பதேபோல் தத்தம் அரந்திறம்பாது அவ்வவர் தொழிலாற்றிப் பிறழ்ந்தார் பீழைபடினும் அவர்க்கு ஊறுசெய்வது கருத்தின்றி அனைவரு மறமாற்றி யொருப்பட வாழும் மக்களையுடையசமுதாயம் நாள்தோறும் நலமுற்று வளரும். தங்கடனாற்றுவதில் இடைவந்த பிறர் நோவ நேருவதல்லால், சமுதாயவாழ்வு பேணுவாரனைவரும் தாம்பிறர்நோவநடவாமலறமாற்ற விரும்பல் வேண்டும். உய்த்துணரின் ஒவ்வொருவருண்மை நலமும் பிறர் நலம் பேணுவதேயாம்.

இனித் தமிழ்ச்சமுதாயம் தற்காலம் நிலைகுலைய நிற்பதற்கு முக்கிய காரணம் ஜாதி மாற்சரியமேயாம். இத்தகைய வேறுபாடுகளென்று மிருந்திருக்க, முன்னில்லாத மாற்சரியவுணர்ச்சி தற்காலம் தடிக்கக் காரண மறியவேண்டும். தமிழகத்தே முன்னையவேறுபாடுகள், சமுதாயப்பொது வாழ்வுக்கு மாறின்றி அவசியம் பற்றியும் வினைவகை இயல்புகள் காரணமாயும் எழுந்தனவாய்ப் பல்வகுப்பினரும் கீழ்மை மேன்மை யுணர்ச்சியின்றித் தத்தம்தொழில் நிகழ்த்தி யொன்றிவாழ்தற்கிசைய அமைந்து நின்றன. சமுதாய வொற்றுமையும் இன்றியமையா இயற்கைச் சிறுவேற்றுமைகளுந் தம்முள் மாறின்றி யியைந்த விணக்கத்தால் தமிழச் சமுதாயவாழ்வு சிறந்து நின்றது. ஆரியவர்ண பேதங்களிற் பேதவுணர்ச்சி யுண்டோ, அன்றி யிடைப்புகுந்ததோ, அறிகிலேம். தமிழகத்தில்பகைமைவித்தாய பேதவுணர்ச்சி கிடையாதென்ப தொருதலை! நிலம் திணை தொழில்கள்பற்றி வேறுபட்ட தமிழர்பலரும், கீழ்மேலுணர்ச்சியற்றுத் தகவும் தருணமும் நேருங்கால் தம்முள் வரைவின்றி உணவும் மணமும் கையாண்டுள்ளார். ஆரிய நாகரிகத்தொடு கலந்த

[௧0-ம் பக்கம் பார்க்க.]



## இயற்கை அழகு.

ந. வீரப்பன் எழுதுவது:—

இயற்கை அழகு என்னும் இனிய சொற்றொடரைக் கண்டவுடன் இயற்கையழகின் இன்பத்தை நுகர்ந்த நண்பர்களின் மனம் களிபேருவகை கொள்ளுமென்பதிலையமில்லை. இயற்கை அழகு யாண்டுளது? இயற்கை அழகு எங்கும் நிறைந்திருக்கின்றது. இயற்கையழகினை எண்ணுந்தோறும் காணுந்தோறும் என்மனம் இப்பூசல் உலகை விட்டு இன்பஉலகாகிய இயற்கைஉலகிற்குச் சென்றுவிடுகின்றது.

பழங்கவிகள் இயற்கைவனப்பினைக் கண்டு ஆனந்திப்பதில் அதிக விருப்பமுடையோராயிருந்தனர். அவர்களின் பாடல்களும் இயற்கை வனப்பைச் சித்திரிக்கும் அரிய கருவியாகத் திகழ்கின்றன. இந்நாள் நாட்டில் இயற்கையழகு கண்டு இன்பம் துய்க்க எண்ணும் மக்கள் மிகமிகச் சிலரேயாவர். செயற்கை அழகிலே மயங்கித்திரியும் மக்கள் கூட்டமே மிகுதியும் காணப்படுகின்றது. இயற்கைஅழகின் இன்பத்தை அவர்கள் உணர்ந்தாரில்லை.

இயற்கைப் பொருளைக்காணுந்தோறும் அதனை அளித்தருளிய ஆண்டவனின் கருணை நன்கு புலப்படுகின்றது. இயற்கையே ஆண்டவன்; ஆண்டவனே இயற்கை என்னும் உண்மையினை நம் மூதாதையர் அறிந்திருந்தமையால் இயற்கையழகினைக் காணுவதில் ஆர்வமுடையோராயிருந்தனர். இயற்கைவேறு, ஆண்டவன் வேறு என்னும் எண்ணமுடைய இக்காலத்து மக்கள் இயற்கை அழகினைக்கண்டு பேரின்பம் அனுபவிக்கும் பேற்றைப் பெற்றாரில்லை.

ஆண்டவன் அழகினைப் பல்வேறு வகையாகக் காட்டும் திறத்தை என்னென்றியம்புவது? வானத்தை நோக்குங்கள்! காலை வேளையில் சூரியன் தனது வெள்ளிய கிரணங்களை வீசிக்கொண்டு வெளிவரும் காட்சி எத்தகைத்து! மாலையில் பச்சை சிவப்பு மஞ்சள் முதலிய பல்வேறு வருணங்களோடு அழகுசெய்து கொண்டு மறைகின்ற காட்சியை எவ்வாறு கூறுவது? இரவில் சந்திரன் தனது மெல்லிய வெண்மையான கிரணத்தை வீசிக்கொண்டு நக்ஷத்திரக்கூட்டங்கள் சூழத் தோன்றுகின்ற வனப்பை எண்ணுந்தோறும் மனமானது இன்பக்கடலாடுகின்றது. கடலின் வனப்பை என்னென்று வருணிப்பது? "பளிங்கு பொய்யென இலங்கு வெண்மணலும் நீனிறக்கடலும் நீளின அலையும்" தோன்றுகின்ற அழகையும் காணுகின்ற பொழுது ஐம்புலன்களும் வேறு தொழிலின்றி அதற்கே அடிமையாகிவிடுகின்றது. மரங்களும் செடிகளும் கொடிகளும் பச்சைப்பசேலென்று விளங்குவதும் அழகிய நறுமணங்கமழும் புஷ்பங்களை ஈன்று தம்மை அழகுசெய்துகொண்டிருக்கும் பூஞ்செடிகளின் வனப்பும் அப்பூவினிடையுள்ள தேனைப் பருக ரீங்காரம் செய்துகொண்டு வருகிற வண்டுகளின் பொலிவும் மனத்தைக் களிக்கச்செய்கின்றன. காடுகளினூடே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்க அதன் இருமருங்கிலும் மரக்கூட்டங்கள் அழகுசெய்து கொண்டிருக்கக் காட்டுப்பறவைகள் தங்களது மெல்லிய இன்னிசைக்குரலால் பாடவும், மான்களும், மயில்களும் குயில்களும் ஆடவும் ஓடவும் இருக்கின்ற காட்சியைக்கண்டுகளிக்க வேண்டுவது ஒவ்வொருவரின் கடமையன்றோ?

---

## ஒற்றுமையின் உயிர்நிலை.

திருவாளர் எஸ். தேசிகவிநாயகம் பிள்ளை, திருவனந்தபுரம்.

ஒற்றுமையாக உழைத்திடுவோம்—நாட்டில்
உற்றதுணைவராய் வாழ்ந்திடுவோம்
வெற்றுரைபேசித் திரியவேண்டாம்—இன்னும்
வீணுய்ப்புராணம் விரிக்கவேண்டாம்.

கூடியிருந்துண்ண வேண்டவில்லை—பெண்ணைக்
கொண்டு கொடுக்கவும் வேண்டவில்லை
நாடி எவரொடும் நட்பினராய்த்—தேச
நன்மைக் குழைப்பதில் நஷ்டமுண்டோ?

கீரியும் பாம்புமாய்ச் சண்டையிட்டு—ஜாதி
கீழென்றும் மேலென்றும் நாட்டிவிட்டு
பாரததாய் பெற்ற மக்களென்று—நிதம்
பல்லவி பாடிப் பயனெதுவோ?

வேதன் முகத்தில் உதித்தவரே—இங்கு
மேலாயுயர்ந்த குலத்தினராம்!
பாதமதில்வந்த பரவியரே—இந்தப்
பாரில் இழிந்த அடிமைகளாம்!

வாயில் விஷமுண்டு பாம்பினுக்கு—கொட்டும்
வாலில் விஷமுண்டு தேளினுக்குத்
தாயிற் சிறந்த பிரமனுக்கும்—இரு
தாளில் விஷமுண்டோ சாற்றுவீரே.

உச்சிமரத்திற் சுவைக்கனியும்—தூரில்
ஒடிப்பரந்தெழும் வேரதனில்
நச்சுக்கனியும் பழுத்தபலாமரம்
நானிலத்தெங்குமே கண்டதுண்டோ?

ஜாதியிரண்டலால் வேறுளதோ—ஔவைத்
தாயின் உரையும் மறந்தீரோ?
ஆதியிறைவன் வகுத்ததுவோ—மக்கள்
ஆக்கிய கற்பனை தானிதுவோ?

நாயனுர் வந்த திருக்குலத்தை—உயர்
நந்தனுர் வந்த பெருங்குலத்தைத்
தீய குலமெனத் தள்ளுவரேல்—அது
தெய்வம் பொறுக்கும் செயலதுமோ?

வேதியராலே மழைவருமேல்—வயல்
வேலைசெய்யாது விளைந்திடுமோ?
வாதமெல்லாம் கட்டி வைத்திடுவோம்—ஒத்து
வாழ்வதை மேற்கொண்டுழைத்திடுவோம்.

வீட்டுக்குள் சண்டைகள் போடுவதேன்—கூரை
வெந்து விழுவதும் கண்டிலீரோ?
நாட்டுக்கு நன்மையை நாடுபவர்—இந்த
நாடகம் ஆடல் நகைப்பலவோ?

மானமே வாழ்வின் உயிர் நிலையாம்—அதை
மாசுறச்செய்தல் கொடுங்கொலையாம்
ஈனஜாதியெனும் பேச்சினைப்போல்—நெஞ்சம்
ஈர்ந்திடும் வாளொன்று வேறுமுண்டோ?

மன்னுயிர்க்காக உழைப்பவர்தான்—இந்த
மாநிலத்தோங்கும் குலத்தினர்கள்
தன்னுயிர் போற்றித் திரிபவர்தான்—என்றும்
தாழ்ந்த குலத்தில் பிறந்தோரே.

---

## ஓர் தனவணிகவாலிபரின்வீரம்.

சிலதினங்கள்முன் ஓர் நாள் நாட்டுக்கோட்டை நகரத்தார் வகுப்பைச் சார்ந்த இரண்டு, வாலிபர்கள் பாலக்காட்டிலிருந்து பட்டாம்பி என்னும் கிராமத்திற்குச் சென்று விட்டு, இரண்டு மைல் தூரமுள்ள பட்டிக்குப் போய் இரவு ௭-மணிக்குத் திரும்பி பட்டாம்பிக்கு வந்துகொண்டிருக்கும் பொழுது இடையில் எட்டுத் திருடர்கள் கத்திகளுடன் தோன்றி வழிமறிக்க, அவ்வாலிபரில் ஒருவர் மிகவும் மூர்க்கமாக அத்திருடர்களுடன் எதிர்த்து முக்கால் மணிநேரம் போராடி அவர்களை ஓட்டம் பிடிக்கச் செய்து விட்டாரெனக் கேட்டு நான் ஆச்சரியப்பட்டு அவ்வாலிபர்களைப் பார்க்கச் சென்றேன். சண்டையிட்ட வாலிபர் கம்பீரமான தோற்றமும், நல்ல தேகக் கட்டுமுடையவராகக் காணப்பட்டார். மோதிரமணிந்திருந்தார். உடை சின்னு பின்னப்படுத்தப் பட்டிருந்தது. காலில் சிறிது ரத்தம் ஒழுகியிருந்தது. திருடர்கள் அவர்களிடமிருந்து யாதொன்றையும் அபகரிக்கமுடியவில்லை என்பதையறிந்து சந்தோஷமுற்றேன். பிறகு, அவ்வாலிபரிடம் நெருங்கிச் சென்று சம்பாஷித்தேன். அவர் பலசாலியாயிருப்பதல்லாமல், எல்லாவிஷயத்திலும் நல்ல ஞானமுள்ளவராகவுமிருக்கிறார். அவரைப் பார்க்கப் பலர் வந்து கொண்டிருந்தனர். எனது சொந்தச் சோலியினிமித்தம் ஒலவக்கோட்டிலிருந்து பட்டாம்பி சென்ற யான் அறிவும் வீரமுமுள்ள ஒருவரைக் காணப்பெற்றேன். இவ்வித வீரமுடையோரைக் கடவுள் காப்பாராக! என்று ஸ்ரீமான் ரா. கிருஷ்ணய்யர்(ஒலவக்கோடு) எழுதுகிறார்.

---

## என்றும் இளமை.

'உதயபாரதி' எழுதுவது:—

எக்காலத்திலும் சூரியகாந்தியில் வசிப்பாயாக; இருட்டில் எந்த வஸ்துவும் இனிமையாவதில்லை, பழுப்பதும் கிடையாது.

*  *  *

அச்சத்தை அடியோடு மறந்துவிடு. எவ்வகையிலும் பயத்தை வெளிக்காட்டாதே. அச்சந்தான் மனித சமூகத்தின் பெரிய பகைவன்.

*  *  *

எவ்விஷயத்திலும் அமிதமாகச் செல்வதை விட்டுவிடு. நீண்ட வாழ்வு ஒரே ஒழுங்காக, நிதானமாக, மிதமாகக் கட்டுப் பாட்டுடன் நடத்தப் படவேண்டும்.

*  *  *

உண்பதற்காக உயிர் வாழாதே; ஆனால் வாழ்வதற்காக உணவெடுத்துக்கொள். மிதமிஞ்சிய போசனத்தினாலும், விலக்கப்பட்டிருக்கும் பொருளை உண்பதினாலும், உண்ண வேண்டிய ஒழுங்கை மீறிடப்பதினாலுமே நமக்குப் பல நோய்கள் உண்டாகின்றன.

*  *  *

வாழ்நாள் கழிந்துகொண்டு வருகின்றது; இன்னும் சொற்ப நாள்தான் உயிர்வாழப் போகின்றோம் என்ற எண்ணத்தை விட்டுவிடு. அந்தக் கவலை வீணானது.

*  *  *

தோல்வியையும் அந்தகாரத்தையும் கண்டு மயங்காதிரு. எப்பொழுதும் வெற்றியையும் ஒளியையுமே கண்டு மகிழ்வடைவாயாக.

*  *  *

குழந்தைபோல் எளிய வாழ்க்கை நடத்து; இயற்கையுடன் சேர்ந்து வாழ்.

*  *  *

பேராசையை விட்டுவிடு. இருப்பதுடன் திருப்திகொண்டு மனச்சாந்தியை யடைவாயாக. ஆசை, மூளையில் பலவிகாரமான நோய்களை உண்டாக்கி விடுகின்றது.

*  *  *

இரவில் படுக்கைக்குப் போகும் பொழுது மனத்திலுள்ள சகல காரியங்களையும் ஒதுக்கித் தள்ளிவிடு. கவலைகள் படுக்கைக்கு வாராமல் தூரத்திவிடு. நாள் முழுவதுந்தான் கவலைப்படுகிறாய். இரவிலாவது களிப்புடன் இளைப்பாற வேண்டும்.

### நீதித் திரட்டு.

தவறு செய்வது மனித சுபாவம், ஆனால் ஓயாது செய்யும் தப்பிதத்தை மன்னித்தல் அசாத்தியம்.

*  *  *

சோம்பலுள்ள மனிதன் தனக்கும் மற்றையோருக்கும் பயனில்லாத ஒரு உயிரற்ற நஷ்ட வஸ்து.

*  *  *

வேலையற்றவர் பலருக்குக் கூலி தேவை; சிலருக்கு வேலையே தேவை.

*  *  *

நாகரிகமான இந்தக் காலத்தில் மனிதர் நோயுடன் இருக்கமுடியாது. ஆரோக்கியத்துடன் வாழவேண்டும்.

*  *  *

ஒவ்வொரு மனிதனும் பிறர் தனக்குச் செய்யவேண்டும் என்ற நன்மையைத் தான் பிறருக்குச் செய்தால் மண்ணுலகம் விண்ணுலகமாய் விடும்.

*  *  *

சில சமயங்களில் நாம் தவறிக்கீழே விழுந்துவிடக் கூடும், ஆனால் விழுந்தபொழுதெல்லாம் மீண்டும் எழுந்திருக்கவும் கூடும்.

# இதுவோ மனித நீர்மை?

மகாத்மா எழுதுவது.

பகுதி ௬.

ஓரன்பர் எனக்கு நீண்டதோர் கடிதம் வரைந்துள்ளார். அதில்பல வினாக்கள் அடங்கியிருப்பதோடு பல சிக்கலான பிரச்னைகளும் எழுப்பப்பெற்றுள்ளன. அவரது "நவஜீவன்" பிரதிகளையும் எனக்கனுப்பியுள்ளார். நான் பிரஸ்தாப விஷயமாக எழுதிவரும் கட்டுரைகள் சம்பந்தமாக, அவர் அனுப்பியுள்ள பிரதிகளின் ஓரங்களில் பல குறிப்புகள் எழுதியிருந்தார். அவரது வினாக்கள் பலவற்றிற்கு முன்னரே இப்பத்திரிகையில் விடையிறுக்கப்பட்டுள்ளன. அவரது ஏனையவினாக்களை இங்கு வெளியிடாது அவற்றிற்கு விடைகளை மட்டிலும் எழுத எண்ணுகிறேன்.

எவ்வித பட்சபாதமுமில்லாமலே இவ்விஷயத்தை நான் பரிசீலனை செய்துவருகிறேனென்றெண்ணுகிறேன். ஹிம்ஸையின் சார்பாக நான்பேசுகிறேனென்றாவது அல்லது இவ்விஷயத்தில் எனது விசித்திரமான கொள்கையை மட்டும் வெளியிடுகிறேனென்றாவது என்னை எவரும் குற்றஞ்சாட்டமாட்டார்களென்பது எனது எண்ணம். உண்மையினிடத்திலேயே எனக்குப் பற்றுண்டு. இவ்வுண்மையினை அஹிம்ஸையின் மூலமாகக் கண்டுகொள்ளவே முயற்சிக்கின்றேன். பிற எம்முறையாலும் அதனைக்கண்டுகொள்ளமுடியாதென்பது எனதுதிடமான கருத்து. நான் சம்பந்தப்பட்ட மட்டில் நமது லட்சியம் உண்மையா அல்லவாவென்பதாவது, அல்லது அஹிம்ஸைதான் அதற்குரிய மார்க்கமா அல்லவாவென்பதாவது விவாதத்திலுள்ள விஷயமல்ல. இம் மூலாதாரக்கொள்கைகளில் நான் சிறிதும் சந்தேகப்படக்காரணமே கிடையாது. இக்கொள்கைகளை எங்ஙனம் அனுஷ்டிப்பது என்பதே என்முன் உள்ளபிரச்னையாகும். ஒவ்வொருநாளும் புதிது புதிதான விஷயங்கள் என்முன் தோன்றிக்கொண்டிருக்கின்றன. அஹிம்ஸையை அனுஷ்டிப்பதில் நான் தவறுகள் இழைக்கக்கூடும். தவறுகள் இழையாமலிருக்க வேண்டுமென நான் எவ்வளவோ முன்னெச்சரிக்கையாக விருந்தபோதிலும் எப்பொழுதாவது தவறுகள் இழைத்துவிடக்கூடும். எனவே இவ்விஷயமாகக் கொண்டு என் நண்பர்கள் அவர்களுக்கும் எனக்கும் அபிப்பிராய பேதங்கள் ஏற்படுங்காலத்து, நான்பட்சபாதமாக நடந்து கொள்ளுகிறேனென்று என்னைக்குறைகூறுதிருப்பார்களாக! என்னையறியாமலே நான் தவறிழைத்திருப்பதாகக்கருதி என்னிடம் சகிப்புத்தன்மை காட்டுவார்களாக. இனியான் எனது விடைகளை யெழுதுகின்றேன்.

(க) வெறிபிடித்த நாய்கடித்தலாவதென்ன அதற்கு என்ன சிகிச்சைசெய்வது என்பன நாம் முடிவுசெய்ய வேண்டிய விஷயங்களல்ல.

(உ) நகரபரிபாலன சபையரோ அல்லது அரசாங்கத்தாரோ பொதுஜன நன்மையெனத்தோன்றும் முறையில் பரிகாரஞ்செய்வர். அஹிம்ஸா முறையிலல்ல. மகாஜனங்கள் உண்மையில் அருளொழுக்கம் நிறைந்தவர்களாயிருப்பின் சரியான பரிகாரங் கண்டுபிடிப்பார்களென்பதில் ஐயமில்லை. மிருகங்களை (இங்குநாய்களை) வதைக்கலாகாதெனும் கொள்கையினை அரசாங்கத்தார் ஒருக்காலும் முற்றும் அங்கீகரிக்கமாட்டார்கள். நகரபரிபாலன சபைகளில் பலமதத்தவர்களும் பல ஜாதியினரும் அங்கத்தவர்களாக விருக்கின்றனர். எனவே அருளொழுக்க முறையில் பரிகாரந்தேட அவர்கள் வற்புறுத்துவார்களென்று எதிர்பார்ப்பதற்கில்லை.

(௩) அருளொழுக்க முறையில் பரிகாரந்தேட வேண்டுவது மகாஜனங்களின் கடமையாகும். மகாஜனங்கள் குற்றமற்றவர் அல்லது பிரஸ்தாப விஷயத்தில் எவ்வித சக்தியுமற்றவர்கள்என்று எண்ணுவது தவறாகும்.

(௪) இவ்விதவாதத்தை முன்னிட்டுக் கவனிக்கையில் வெறிபிடித்த நாய்க்கும், வெறிகொண்டு பிறரைக் கொல்லும் செயலில் ஈடுபட்டிருக்கும் மனிதனுக்கும் நான் எவ்வித வித்தியாசமுங் கற்பிக்கவில்லை. வழக்கமாக ஹிம்ஸைச் செயலில் ஈடுபடுவது ஓர்வித நோயாகும். வழக்கமாக ஹிம்ஸை முறையில் ஈடுபட்டிருப்பவன் தன்னறிவு இழந்தவனாயிருப்பதனாலேயே தனதுகொலைத் தொழிலை நடத்திக்கொண்டே போகிறான். வெறிபிடித்த நாயையும், வெறிபிடித்த மனிதனையும் கண்டு நாம் இரங்கவேண்டுவது தான். ஆனால் அவர்களோ அவைகளோ பிறருக்குத் தீங்கு செய்வதைக் காணின், அவர்களையோ அல்லது அவைகளையோ கொல்லாமல் அத்தீங்கினைத் தடுக்க வேறு வழியில்லையெனின் அத்தீங்கினைத் தடுக்கும் பொருட்டு அவ்வாறு செய்யவேண்டுவது நமது கடமையாகின்றது. அருளொழுக்கம் நிறைந்தவருக்கு இவ்வாறு செய்யவேண்டுவதுஇன்றியமையாக் கடனாகின்றது.

(௫) ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாய் வைத்துக்கொள்ள வேண்டுமென நான் ஒருக்காலும் எண்ணவேயில்லை. சொந்தக்காரின்றிநாய்கள் இருத்தலாகாதென்றே நான் கூறினேன். சொந்தக்காரர்களையுடைய நாய்கள் வெறிபிடியாமலிருக்குமென்பது இதன் கருத்தல்ல. அவைகளுக்கு நோய் வந்தாலோ அல்லது, அவைகளுக்கு வெறிபிடித்தாலோ அவற்றின் சொந்தக்காரர்களே அதற்குபொறுப்பாளிகளாக விருப்பார்கள்.

(௬) சொந்தக்காரர்களில்லாத, அலைந்து திரியும் நாய்கள், ஆட்டுக்குட்டிகளைப் போல் எவ்வித தீங்கும் செய்யாதவைகளாக விருப்பதில்லை. அவைகள் தீங்கு செய்யாதனவாக ஒருக்காலும் இருப்பதில்லை. சொந்தக்காரர்களுள்ள நாய்கள் பொதுவாக அவ்வாறே யிருக்கின்றன. இவ்விவாதத்தின் நோக்கம் எல்லா நாய்களையும் தீங்கற்றவைகளாகச் செய்யவேண்டுமென்பதேயாகும்.

(௭) அலைந்து திரியும் நாய்களை, அவைகளைக் காணுமிடங்களிலேயே கொன்றுவிடவேண்டுமென்று நான் கூறவேயில்லை. அந்நாய்களின் நன்மையை முன்னிட்டே சட்டங்கள் இயற்றப்படவேண்டுமென யோசனை கூறினேன். அவ்வாறு சட்டங்களியற்றுவது ஜீவகாருண்யமுள்ளவர்கள் தங்கள் கடமையை உணருமாறு செய்யும். பின்னர் அவர்கள் நாய் வளர்ப்பார்கள். அல்லது வேறு எவ்வித பரிகாரமாவது செய்வார்கள். அவற்றின் பயனாக அலைந்து திரியும் நாய்களே இல்லாது போய்விடும். பிச்சைக்காரனுக்குப் பிச்சை இட மறுப்பது அவனைப் பட்டினிகிடக்கச்செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடல்ல. அவனுக்குத் தன்னம்பிக்கையைப் போதிக்கும் நோக்கத்தோடேயாகும்; அவனை ஓர் மனிதனாக்கவேண்டுமென்ற நோக்கத்தோடேயாகும். நாய்களைக் கொல்ல வேண்டிய அவசியம் எழுதுவது பற்றி நான் முன்னர் எழுதிய வியாசங்களில் குறிப்பிட்டுள்ளேன். நாய்களை வதைப்பது, பாவமெனக் கூறுவது என்னை மறப்பதாகாது. இதற்கு மாறான அபிப்பிராயம் நான் எக்காலத்திலும் கூறியதில்லை.

(௮) திரு அம்பாலால் அவர்களது நடத்தை சரியா அல்லது தவறு, என்பது பற்றியாவது, அதுபற்றி யான் கூறிய அபிப்பிராயம் சரியா அல்லது தவறு என்பதுபற்றியாவது விவாதித்துக் கொண்டிருப்பது வீண் வேலையாகும். பிரஸ்தாப சம்பவத்தைப்பற்றிய முழு விவரங்களும் பொது ஜனங்களுக்குத் தெரியாது. முக்கியமான விஷயம் அஹிம்ஸையைக் குறித்ததாகும். இவ்விவாதத்தில் திரு அம்பாலாலது பெயரைக்கொண்டு புகுத்துவது முக்கியமான விஷயத்தையேமறைப்பதாகும்.

(௯) முக்கியமான விஷயம் என்னவெனில், வேறு வழியில்லாவிடில் சில சந்தர்ப்பங்களில் நாய்களைக் கொல்லுவதைக் கடமையாகக் கொள்ளுவது அருளொழுக்கத்திற்கு உடன்பாடுடையதாவென்பதேயாகும். உடன்பாடுடையதென்பதே எனதபிப்பிராயம். இவ்விஷயத்தில் வேறுவிதமான அபிப்பிராயம் இருக்கமுடியாதென்றே கூறுகின்றேன். குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் அச்செயல் நியாயமா அல்லவாவென்பதுபற்றி அபிப்பிராயபேதங்கள் இருத்தல் கூடும் அத்தகைய சந்தர்ப்பங்கள் அபூர்வமாகத்தான் ஏற்படக்கூடும் என்று அருளொழுக்கம் நிறைந்தவர்கள் திருப்தியடையக்கூடும்.

(௧௦) தற்காலம் ஒரே ஒரு அபிப்பிராய பேதம் இருக்குமென்பதை ஒப்புக்கொள்கிறேன். நாம் கவனித்துவரும் கடிதத்திலும் வேறு பல கடிதங்களிலும் எவ்வித சந்தர்ப்பமானபோதிலும் உயிர்ப்பிராணிகளை வதைப்பது தகாது எனும் விஷயம் அடங்கியுள்ளது. உதாரணமாக, வெறிபிடித்த நாய்களையுங்கூட ஓர் குறிப்பிட்ட இடத்தில் வைத்து அவை நாளடைவில் இறந்துபோகும்படி விட்டுவிட வேண்டுமென்று யோசனை கூறப்படுகிறது. இந்த யோசனைப்படி செய்ய முடியாதென எனக்குப் படுகிறது. ஒரு நாயோ அல்லது வேறு மிருகமோ தானாக மெதுவாகச் சாகுந் துன்பத்தைக்கண்டு ஒரு கணமேனும் என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியாது. இவ்வித நிலையிலிருக்கும் ஓர் மனிதனை நாம் கொல்லுவதில்லை. ஏனெனில் அதிக நம்பிக்கையான பரிகாரங்கள் அவனுக்குச் செய்யலாம் என்ற நம்பிக்கை நமக்கிருக்கிறது. அதே நிலையிலுள்ள ஒரு நாயை வேறு பரிகாரமில்லாததால் நாம் கொன்றுதான் ஆகவேண்டும். எனது குழந்தையை வெறிநாய்கடித்து அக்குழந்தை துன்பத்தினின்றும் காப்பாற்றவே வழியில்லையெனின் அக்குழந்தையைக் கொல்லுவதே எனது கடமையென்று நான் எண்ண வேண்டும். 'விதி' 'விதி' என்பதற்கும் ஓர் எல்லையுண்டு. எல்லாவிதமான பரிகாரங்களையும் செய்து பார்த்துவிட்டு இறுதியாக 'விதி'யென்று, விட்டு விடுகின்றோம். ஓர் குழந்தையின் துன்பத்தைப் போக்குவதற்கு முடிவான பரிகாரம் அதன் உயிரை மாய்ப்பதேயாகும்.

இவ்விஷயம் பற்றி நான் அதிகம் விவாதித்துக் கொண்டிருக்கப் போவதில்லை. அருளொழுக்கம் நிறைந்தவர்களெனப் படுவோரால் செய்யமுடியாததென எனக்குத் தோன்றுவது அந்த தர்மத்தைச் சரிவர அறிந்துகொள்ளுவதற்கு ஓர் தடையாகும். எனவே, எனது அபிப்பிராயத்திற்கு மாறான எண்ணங்கொண்டிருப்பவர்கள் தற்பொழுது எனது கொள்கைக்கு இடங்கொடுப்பார்களென நம்புகிறேன்.

ஒருஅன்பரது ஆழ்ந்தகருத்துக்களடங்கிய கடிதத்திற்கு இவ்வளவு கூறினேன். இனிகோபக்கனல் மேலிட்டு மற்றொருவர் எழுதியகடிதத்தைக் கவனிப்போம்.

"மனிதனது நலத்தின் பொருட்டு கீழான ஜீவஜந்துக்களைக் கொல்லுவது சரியென்று நீங்கள் கருதக்கூடியவாறு மேனாட்டு நாகரிகமுறை உங்களையாட்கொண்டு விட்டது. உங்களது தவறை ஒப்புக்கொண்டு உலகத்தாரிடம் மன்னிப்புக்கேட்டுக் கொள்ளுவது மேலாகும். நிரம்பப் பரிசீலனைசெய்துபார்த்து இவ்விஷயத்தில் நீங்கள் ஒருவிதமான முடிவான அபிப்பிராயத்திற்கு வந்திருக்க வேண்டும். அவ்வாறுசெய்யாமல் ஆத்திரத்தில் ஒர்கட்சியில் தலையிட்டுக் கொண்டு உங்களையே அகௌரவப் படுத்திக்கொண்டீர்கள்."

என்று அக்கடிதத்தில் கூறப்பெற்றுள்ளது. இதுபோன்ற கடிதங்களில் காணப்படும் வாக்கியங்களில் இதுவே அதிக கோபத்தை எழுப்பாதவாக்கியமென நான் பொறுக்கியெடுத்திருக்கிறேன். ஆழ்ந்து யோசனை செய்யாமல் நான் எவ்வித முடிவுக்கும் வந்துவிடவில்லை யென்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன் சமீபகாலத்திற்றான் இவ்விதமுடிவிற்கு நான்வந்துவிட்டேனென்பதுமில்லை. அவசரமாக அடைந்துள்ள அபிப்பிராயம் என்று சொல்லுவதற்குமில்லை அபிப்பிராயங் கொள்ளுவதில் எவரும் தனது புகழ் எனப்படுவதைச் சிறிதும் கவனித்தலாகாது அவ்வாறு அதனைப் பொருட்படுத்திக் கவனிப்பின் உண்மையைக் காணவியலாது.

மேனாடு சம்பந்தப்பட்ட அனைத்தையும் விலக்கிவிடவேண்டுமென்று நான்கருதவில்லை. மேனாட்டு நாகரிக முறையினை நான்வெகு பலமாகக் கண்டித்துள்ளேன். இன்றும் அவ்வாறே கண்டிக்கிறேன். எனினும், மேனாடு சம்பந்தப்பட்ட அனைத்தையும் விலக்கிவிடவேண்டுமென்பது அதன் பொருளல்ல. மேனாடுகளிலிருந்து நான் ஏராளமான விஷயங்கள் கற்றிருக்கிறேன். அவ்விஷயத்தில் நான் நன்றியறிதலுள்ளவனாக விருக்கின்றேன். மேனாட்டுப்பழக்கமும் கலைகளும் என்னை எவ்விதத்திலும் ஆட்கொள்ளவில்லையெனின் நான் துர்பாக்கியமுள்ளவனென்றே எண்ணிக்கொள்ளவேண்டும். நாய்கள் விஷயத்தில் நான்கொண்டுள்ளஅபிப்பிராயம்மேனாட்டுக் கல்வியாலாவது மேனாட்டுப் பழக்கத்தாலாவது எனக்கேற்படவில்லை என்பதே எனதுகருத்து. மேனாட்டவர் (ஒருசிறுகூட்டத்தைத்தவிர) அனைவரும் மனிதரது நன்மையை முன்னிட்டு பிறஜீவஜந்துக்களைக் கொல்லலாமென்றே கருதுகின்றனர். சாஸ்திர அறிவுபெறும்பொருட்டு ஜீவஜந்துக்களை அறுப்பதை மேனாட்டவர் ஆதரித்து வந்திருக்கின்றனர். வாய் ருசியின் பொருட்டு எத்தகைய ஹிம்ஸைசெய்வதும் தவறாகாதென மேனாட்டவர் கருதுகின்றனர். இக்கொள்கைகளை நான் ஆதரிக்கவில்லை. உபயோகமற்ற மிருகங்களைக் கொல்லுதல் மேனாட்டு முறைப்படி பாபமல்ல; கௌரவமேயாகும். ஒவ்வொன்றுக்கும் எல்லையுண்டென்பதை நான் ஏற்றுக்கொள்ளுகின்றேன். தாவரங்களின் உயிரை மாய்ப்பதும் ஹிம்ஸையென்றே நான் கருதுகின்றேன். இக்கொள்கை மேனாட்டுப் போதனையல்ல.

எனது அபிப்பிராயங்களை, அவைகள் மேனாடுகளிலிருந்து பெறப்பட்டிருந்தாலும், அல்லது கீழ்நாடுகளிலிருந்து பெறப்பெற்றிருந்தாலும், அவைகளைப் பொருட்படுத்தாமல், அவற்றின் தன்மையைக் கொண்டே நிர்ணயிக்கவேண்டும். அவைகள் உண்மையை ஆதாரமாகக் கொண்டுள்ளனவா அல்லது பொய்யை ஆதாரமாகக் கொண்டுள்ளனவா, ஹிம்ஸையா அல்லது அஹிம்ஸையா என்பனவே கவனிக்கப்படல் வேண்டும். அவைகள் உண்மையையும் அஹிம்ஸையையும் அடிப்படையாகக் கொண்டவைகள் என்பதே எனது திடமான அபிப்பிராயம்.

---

பகுதி ௭.

சிற்சில சந்தர்ப்பங்களில் நாய்களை வதைக்கலாமென நான் கூறியதற்கு மூலகாரணமாயிருக்கும் தத்துவத்தை எனது நிருபர்களிற் சிலர் உணர்ந்துகொண்டதாகத் தோன்றவில்லை. மனித வருக்கத்தாரின் நலனைக் குறித்துமட்டும் நான் அவ்

(௯-ம் பக்கம் பார்க்க.)

(சு-ம் பக்கத் தொடர்ச்சி.)

வாறு கூறிவிடவில்லை. அச்செயலால் மனிதவருக்கத்தாருக்கும் தற்செயலாக நலன் ஏற்படுகின்றதேயன்றி வேறல்ல. அப்பிராணிகள் (நாய்கள்) தற்போது இருந்து அனுபவித்துவரும் பெருந் துன்பத்தினின்றும் அவற்றை நீக்கும் பொருட்டே பிரஸ்தாப முறை கையாளப்பட்டது.

தொடர்ந்துவரும் இக்கட்டுரைகளில், நான் வற்புறுத்தப் புகுவது யாதென்று கூறுவேன். தாழ்ந்த மிருகங்களைக்கூட தன்னிஷ்டப்படி செய்து கொள்ளும் உரிமை மனிதனுக்கு உண்டென்றுவது தன் சுகத்திற்காதல், இன்பத்திற்காதல் கொல்லலாமென்று நான் கூறத் துணிய வில்லை. உயர்ந்த ஆன்மாவின் அறிகுறி தன்னைச் சுற்றிலுமுள்ளவைகள் துன்பத்தால் பாதிக்கப்படாமலிருப்பதுதானென்று எனது நிருபர்களில் ஒருவர் கூறுகின்றார். இது அவரது மனக்குழப்பத்தையே காட்டுகின்றது. பிறர் துன்பங்கண்டு உருகப் பழகாத உள்ளம் உயர்ந்த உள்ளமன்று. பிறர்பால் தன்னையும், தன்பால் பிறரையும் கண்டு, நோக்குமிடங்களில் எல்லாம் நாமன்றி வேறில்லை யென்று உணர்ந்து உணர்ந்து உருகப் பெறாத உள்ளம் வாய்ந்தவன் கருணையற்றவன். பிறருக்கு இன்பம் ஊட்டும் பேராசையே அஹிம்சையைக் கண்டுபிடிக்க வழிகாட்டியதாகும். அருள் வடிவினனான நல்லறிஞன், தன் சொந்த உட்லின்பம் துறப்பதிலேயே ஆன்ம சுகம் விளைவதென்றுன்னி, தன்னைச் சூழ்ந்துள்ள வாயிலாப்பிராணிகளைத்தன் இன்பத்தின் பொருட்டுக் கொலைசெய்ய மறுத்துவிட்டான்.

ஒரு பாம்பு என்னைக் கடிக்க வந்து பயமுறுத்தினால் நான் என்னசெய்யவேண்டுமென்று ஐயுற்று, ஸ்ரீ ராஜசந்திரர்பால் சென்று யோசனை கேட்டேனென்பதை ஒரு நிருபர் நினைப்பூட்டுகின்றார். பாம்பைக் கொல்லுவதைப்பார்க்கிலும் நான் அதனால் கொல்லப்படுமாறு இணங்குவதே மேலானதென்று ஸ்ரீ ராஜசந்திரர் எனக்கு உபதேசம் செய்தது உண்மையே. ஆனால் இப்பொழுதுள்ள விவகாரம் என்னைப் பற்றியதன்று என்பதையே நிருபர் மறந்துவிடுகின்றார். மிருகங்களின் துன்பத்தைக் கவனிப்பதோடு ஜன சமுதாயப் பொது நலத்தையும் சிந்தை செய்தல் வேண்டுமன்றோ? நான் ராய்ச் சந்தபாயை (ஸ்ரீ ராஜ சந்திரபாய்) அணுகி, அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு பாம்பை வேறுவழியில் அதன் துன்பத்தைக் குறைக்கமுடியாத இடத்துக்கொன்றுவிடலாமா அல்லவா என்று கேட்டிருந்தாலும், அல்லது என் ஆதரவிலுள்ள ஓர் குழந்தையைக் கடிக்கவரும் ஒரு பாம்பை வேறுவழியில் துரத்தமுடியாத பொழுது, கொல்லலாமா அல்லவா என்று வினவியிருந்தாலும் அவர் எத்தகைய விடையிறுத்திருப்பார் என்பதைநான் இப்பொழுது சொல்லமுடியவில்லை. எனக்கோ விடை வெட்ட வெளிச்சமாயிருக்கின்றது. என் அபிப்பிராயத்தை ஏற்கனவே அளித்து விட்டேன்.

கல்விப் பயிற்சி வாய்ந்த நிருபர் ஒருவர் ஒரு ஜைன வேதாந்தியின் சில பிரமாணங்களை எனக்குக் காட்டி, அவ் அபிப்பிராயங்களை நான் அங்கீகரிக்கின்றேனா என்று வினவுகின்றார். குறித்த பிரமாணங்களில் ஒன்று வருமாறு :—

'மனிதரைக் கொல்லும் பிராணிகளைக் கூட ஒருவன் கொல்லலாகாது. அவற்றுள் ஒன்றைக் கொல்வதால் பல உயிர்களையும் காக்கலாம் என்று கருதுவது தவறு."

இன்னொரு பிரமாணம் கூறுவது :—

'குறித்த பிராணிகள் நீண்ட வாழ்வு வாழ்வதால் பாவத்தில் ஆழ்தல் கூடுமென்ற கருணை யுணர்வோடும் அவற்றினை ஒருவன் கொல்லாகாது'

மூன்றுவது பிரமாணம் கூறுவது :—

'துன்பத்திலிருக்கும் பிராணிகளை; அத்துன்பத்தைக் குறைத்தல் கூடுமென்ற கருத்தோடும் கொல்லலாகாது.'

# அடிகளின் உண்மைவாழ்வு.

## பூனவும் சென்னையும்.

### இரண்டாம் பாகம்.

அதிகாரம் உஅ.

(காந்தியடிகள் "நவஜீவனில்" எழுதி வரும் தற்சரிதம்.)

ஸர்பெரோஸ்ஷா அவர்கள் எனது வேலையை இலகுவாக்கிவிட்டார். எனவே பம்பாயிலிருந்து நான் பூனா சென்றேன். அங்கு இரு கட்சிகளிருந்தன. எனது வேலைக்குப் பலதிறப்பட்டகொள்கையுள்ள எல்லாக் கட்சிக்காரர்களது உதவியும் தேவை. முதலாவதாக 'லோகமான்ய திலகரைச் சந்தித்தேன். அவர் பின்வருமாறு கூறினர் :—

"எல்லாக் கட்சிக்காரர்களின் உதவியையும் நீங்கள் நாடுவது முற்றும் சரியே. தென்னாப்பிரிக்கா விஷயத்தில் எவருக்கும் எவ்வித அபிப்பிராயபேதமும் இருக்க நியாயமில்லை. எனினும் எக்கட்சியிலும் சாராதஒருவரைப்பொதுக்கூட்டத்திற்குத் தலைவராக நீங்கள் தேர்ந்துகொள்ள வேண்டும். ஆசிரியர் பந்தர்க்கர் அவர்களைச் சந்தியுங்கள். சிறிது காலமாகப் பொது இயக்கங்களெதிலும் அவர் ஈடுபடவில்லை. பிரஸ்தாப விஷயம் அவர் ஒதுங்கி நிற்பதினின்றும் வெளிவரும்படி செய்துவிடக்கூடும். அவரைக்கண்டு, அவர் யாது கூறுகிறாரென்பதை யறிந்து என்னிடம் தெரிவியுங்கள். என்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு தூரம் உங்களுக்கு உதவிசெய்ய வேண்டுமென்பது எனது விருப்பம். தங்களுக்கு விருப்பமான நேரங்களிலெல்லாம் நீங்கள் என்னை வந்து சந்திக்கலாம். நான் உங்களது இஷ்டப்படி செய்யக் காத்திருக்கிறேன்"

லோகமான்யதிலகரை நான் முதன் முறையாகச் சந்தித்தது இதுவேயாகும்.

---

மேலே குறித்த பிரமாணங்களின் பொருள் எனக்குத் தெளிவாக இருக்கிறது. ஏதாவதொரு சித்தாந்தத்தைக் கொண்டு அவ்வாறே ஒவ்வொரு சமயத்திலும் ஒழுகவேண்டுமென்பது தவறு. உனது பிரியமான கொள்கை ஒன்றின் பொருட்டு நீ ஹிம்சை புரியலாகாது. அது தீராக் கடமையாக உனக்கும் வேறு வகையின்றி ஏற்பட்டால் நீ ஹிம்சை புரியலாம். ஒருவனுக்கு இயல்பாகவே ஏற்படுங் கருமத்தையும் பலனைக் கருதாது செய்யுங் கருமத்தையும் விடுதலை பெற முயல்வோன் தன் கடமையாகச் செய்தல் வேண்டுமென்று கீதை கூறுகின்றது. உன்னை வழி வினவி வரும் கருமத்தினைச் செய்வதற்கு உன் பிராண சக்தியை உபயோகித்தல் வேண்டுமென்றும் புதிய புதிய துறைகளில் செயல்களைப் பெருக்கிக்கொண்டே போகவேண்டாமென்றும் ஜைன தத்துவ சாஸ்திரி கூறுவதாக நான் உணர்கின்றேன். மேலே காட்டிய பிரமாணங்களெல்லாம், ஹிம்ஸை இன்றியமையாதவிடத்து ஒருவன் நடந்து கொள்ளவேண்டிய வைராக்கிய மனநிலையினையே வரையறுத்து வெளியிடுகின்றன.

ஆனால், யாதொரு பிரமாணமுமின்றியே நான் இவ்விஷயத்தில் ஒரு முடிவுக்கு வந்திருக்கின்றேன். எனினும், ஆதியில் இவ் அபிப்பிராயத்தை உருவாக்கிய காரணங்கள் பலவாக இருந்திருக்கலாம். என் கொள்கைகள் முற்றும் அஹிம்ஸா தருமத்தோடு பொருந்துவனவே என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். ஆனால் ஜைன வேதாந்தியின் அபிப்பிராயத்திற்கு இது முரண்படுவதாமென ஒருவர் மெய்ப்பித்தலும் கூடும்.

அவரது செல்வாக்கு அச்சந்திப்பினின்றுமே நன்கு விளங்கிவிட்டது.

பின்னர் கோகுலே அவர்களைச் சந்தித்தேன். பெர்குஸன் கலாசாலை மைதானத்தில் நான் அவரைக் கண்டேன். ஆதரவுடன் எனக்கு நல்வரவு கூறினர். அவர் என்பால் நடந்துகொண்ட பான்மை உடனே என்னையாட்கொண்டு விட்டது. அவரையும் முதன் முதலாக நான் இப்பொழுதுதான் சந்தித்தேன். எனினும் எங்களது சந்திப்பு பழய இரு நண்பர்கள் சந்திப்பதைப் போலவேயிருந்தது. ஸர் பெரோஸ்ஷா அவர்கள் இமயமலையைப் போலவும், லோகமான்யர் கடலைப்போலவும், எனக்குத் தோன்றினர்கள். ஆனால் கோகுலரோ கங்கை நதியைப்போல் காணப்பட்டார். ஒருவன் அப்புண்ணிய நதியில் ஸ்நானம் செய்து தன் களைப்பை மாற்றிக்கொள்ள முடியும். இமயமலையை அளவிடமுடியாது. கடலிலோ இலகுவாக நெடுந்தூரஞ்செல்ல வியலாது. கங்கைநதி தனதுஉளத்தோடு ஒன்றுபடும்படி என்னை யழைத்தது. அதில் ஓர் துடுப்புடன் படகிலிருப்பது அடங்கா மகிழ்ச்சியாகும். ஓர் பள்ளிக்கூடத்தில், புதிதாகச் சேர வரும் மாணவனை உபாத்தியாயர் எவ்வாறு பரிசோதிப்பாரோ அவ்வாறு கோகுலேயும் என்னைப் பரிசோதித்தார். யார் யாரைச் சந்திக்கவேண்டுமென்றும், எவ்வாறு அவர்களை அணுகவேண்டுமென்பதையும் எனக்குத் தெரிவித்தார். எனது பிரசங்கத்தில் நான் கவனமாயிருக்கவேண்டுமென்று என்னிடம் கூறினர். கல்லூரி முழுமையும் எனக்குக் காண்பித்தார். தான் எப்பொழுதும் எனக்கு உதவிசெய்யக் காத்திருப்பதாகவும், டாக்டர் பந்தர்க்கரைச் சந்தித்துப் பேசிய விஷயத்தைப் பற்றித் தன்னிடம் தெரிவிக்கவேண்டுமென்றும் என்னிடம் கூறி நான் மிகுந்த சந்தோஷத்துடன் திரும்பும்படி செய்தார். அரசியல் உலகத்தில், அவர் உயிரோடிருக்குங்காலத்திலும் இப்பொழுதும், அவ்ரைப்பற்றி மிகமிக மேலான அபிப்பிராயமே யான் கொண்டுள்ளேன்.

ஓர்தந்தை தன்மகனை மிகுந்த ஆர்வத்துடன் வரவேற்பதுபோல் டாக்டர் பந்தர்க்கர் என்னை வரவேற்றார். நான் அவரைச் சந்திக்கும்பொழுது பிற்பகல். அந்நேரத்திலும் நான் சுறுசுறுப்பாகப் பலரையும் சந்தித்துப் பேசச்சென்றுகொண்டிருந்தது அவ்வறிஞரின் மனத்தை மகிழ்வித்தது. எக்கட்சியிலும் சாராத ஒருவர் தலைமை வகிக்கவேண்டுமென்று நான் வற்புறுத்தியது உடனே எனது வேண்டுகோளுக்குஅவரை இசையும்படி செய்தது. எனது வேண்டுகோளுக்கு இசைந்ததற்கு அறிகுறியாக "அதுவேசரி" "அதுவே சரி" என்றகூறினர்.

நான் கூறியவைகளையெல்லாம் செவிமடுத்தபின்னர் அவர் கூறியதாவது:—'நான் அரசியல் விஷயங்களில் தலையிடுவதில்லை யென்பதை எவரைக்கேட்டாலும் தெரிவிப்பார்கள். எனினும் நான் உங்களது வேண்டுகோளை மறுக்கக் கூடாது. இப்பொதுக்கூட்டத்தில் கலந்துகொள்ள முடியாதென் மறுக்கமுடியாதபடி உங்களது கட்சி அவ்வளவு பலமாக இருக்கிறது. உங்களது முயற்சி அவ்வளவு வியக்கத்தக்கவிதமாக விருக்கிறது. திலகரையும் கோகுலேயையும் நீங்கள் சந்தித்துப்பேசியது நிரம்பவும் சரி. இரு சபைகளின் ஆதரவிலும் நடைபெறவிருக்கும் பொதுக்கூட்டத்தில் தலைமைவகிக்க நான் சந்தோஷத்துடன் ஒப்புக்கொள்ளுகிறேன் என்பதைத் தயவுசெய்து அவர்களிடம் தெரிவியுங்கள். எனது அவகாசத்தைக் கவனித்துக் கூட்ட நேரத்தை நீங்கள் நிர்ணயிக்க வேண்டாம். அவர்களுக்கு உகந்தநேரம் எதுவானாலும் அதற்கு நான் தயார்.' இவ்வார்த்தைகளுடன் என்னைப் பாராட்டி ஆசீர்வதித்து எனக்கு விடைதந்தனுப்பினர்.

இத்தகைய தன்னலமற்ற, விடாமுயற்சியுள்ள பூனாநகரைச்சேர்ந்த ஊழியர்கள் எவ்வித ஆர்ப்பாட்டமுமில்லாமல் ஆடம்பரமற்ற ஓரிடத்தில் ஓர் பொதுக்கூட்டம் கூட்டுவித்து மிகுந்த சந்தோஷத்துடனும் எனது முயற்சியில் பூரண நம்பிக்கையுடனும் என்னைவழியனுப்பினர்கள்.

பின்னர் சென்னை சென்றேன். அங்கு உற்சாகம் வெகு அதிகமாகவிருந்தது. பாலசுந்தரம் அவர்களது சம்பவம் ஜனங்கள் மனத்தில் நன்கு பதிந்து ஓர்வித அபிப்பிராயத்தை யேற்படுத்தியது. எனது பிரசங்கம் அச்சிடப்பெற்றிருந்தது. வெகு நீளமாகவுமிருந்தது. எனினும் கூட்டத்தில் கூடியிருந்தவர்கள் ஒவ்வொரு வார்த்தையையும் கவனமாகச் செவிமடுத்தார்கள். கூட்டமுடிவில் 'பச்சைத் துண்டுப் பிரசுர'த்தை ஜனங்கள் வெகு ஆர்வத்துடன் வாங்கிப் படித்தனர். இத்துண்டுப் பிரசுரத்தை இரண்டாமுறையாக, ஆயிரம் பிரதிகள் அச்சிட்டுக் கொண்டுவந்திருந்தேன். சூடான பணியாரம் எவ்வளவு விரைவாக விற்குமோ அவ்வளவு விரைவாக இத்துண்டுப் பிரசுரங்கள் விற்பனையாயின. அவ்வளவு ஏராளமாக நான் அச்சிட்டுவைத்திருக்கவேண்டியதில்லை யென்பதைப் பின்னர் உணர்ந்தேன். எனது உற்சாகத்தில், அதிகமாகத் தேவைப்படுமென்று எண்ணிவிட்டேன். ஆங்கிலம் கற்றவருக்கு மட்டுமே அதில் விஷயங்களை நான் கூறியிருந்தேன். சென்னையில் மட்டும் பதினாயிரம்பிரதிகளும் விற்றிருக்க முடியாது.

"மெட்ராஸ் ஸ்டாண்டர்டு" என்னும் பத்திரிகையின் காலஞ்சென்ற ஆசிரியர் திரு. ஜி. பரமேசுவரன் பிள்ளையவர்கள் எனக்குப் பெரிதும் உதவி செய்தார். பிரஸ்தாப விஷயத்தை அவர் நன்கு பரிசோதனை செய்திருந்தார். அடிக்கடி என்னைத் தனது காரியாலயத்திற்கு வரவழைத்து எனக்கு யோசனை கூறுவார்.

"ஹிந்து" பத்திரிகையின் ஆசிரியராயிருந்தகாலஞ்சென்றதிரு ஜி. சுப்பிரமணிய அய்யரவர்களும், காலஞ்சென்ற டாக்டர் எஸ். சுப்பிரமணியஅய்யரவர்களும் என்னிடம்அனுதாபங்காட்டினர். எனினும் திரு. பரமேசுவரன்பிள்ளையவர்கள் தனது பத்திரிகையின் பத்திகளை அநேகமாக என்வசமே ஒப்புவித்துவிட்டாரெனலாம். நானும் அவ்வுதவியைப்பெரிதும் பயன்படுத்திக்கொண்டேன். பச்சையப்பன் மண்டபத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு டாக்டர் சுப்பிரமணியஅய்யர் தலைமை வகித்ததாக எனக்கு ஞாபகம்.

என்து மனத்திலுள்ளதை வேறொரு பாஷையில் (ஆங்கிலத்தில்) அவர்களிடம் கூற நேர்ந்தபோதிலும் அந்நண்பர்கள் என்னிடம் மிகுந்த அன்புகாட்டியதால் அவர்கள் மத்தியில் நான் ஓர் அந்நியனைப்போலிருக்கவில்லை. அன்பினால் அகற்றப்பெறாத தடையும் ஒன்று உண்டோ?

## கப்பற்செய்தி.

### மலாய்நாட்டுக் கப்பல்கள்.

நாகபட்டினத்திலிருந்து புறப்படுந்தேதிகள் :—

5—12—26
11—12—26
19—12—26
25—12—26

மலாய் நாட்டிற்கு வாரமொருமுறை நாகபட்டணத்திலிருந்து கப்பல் புறப்படுவதாகக் கப்பல் கம்பெனி ஏஜெண்டு அறிவிக்கிறார்.

### இரங்கூன் கப்பல்.

"எரின்புரா"க்கப்பல் சென்ற திங்களன்று இரங்கூனிலிருந்து சென்னைவந்து சேர்ந்தது. நாளை வெள்ளிக்கிழமை இரங்கூனுக்குத் திரும்பும்.



Best copy available

## உள்ளுறை.



நாளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்:

குமரன், காரைக்குடி.
அட்சயஆு கார்த்திகைமீ ௧௭உ

## ஸர் பி. ஸி. ராய்.

மைசூர் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவை முன்னிட்டு ஸர் பி. ஸி. ராய் செய்த பேருரை, நாட்டு நன் மக்கள் அனைவரும் நன்கு சிந்தை செய்து போற்றத்தக்கபொருள் பொதிந்ததோர் பொன்னுரையாகும். ஸர் பி. ஸி. ராய் உலகப் பிரசித்தி பெற்ற இரசாயன சாஸ்திரி—உத்தம தேச பக்தர்—கல்வித் துறைகளில் ஓர் நிபுணர்—அனுபவ தேசிய ஞானி. தற்பொழுது நமது நாட்டுக்கல்லூரிகளில் காணப்படும் கல்வி முறைகளின் குறைகளை, நீண்ட காலப் பழக்கத்தால் நன்குணர்ந்த பெரியார் ஸர் பி.ஸி.ராய். இவரைக் கேவலம் கிளர்ச்சிக்காரர் என்றுதல் புரட்சிக்காரர் என்றுதல், ஒருவரும் கூறத் துணியார். "ஏட்டுச் சுரைக்காய் கறிக்கர குமா?" என்ற வண்ணம் நமது தற்காலப் பள்ளிப்படிப்பு உலகவாழ்க்கையில் யாதொரு நற்பயனும் நல்குவதில்லை. நமது பட்டதாரிகளில் எத்தனை பேர் உலக அறிவு பெற்றுள்ளார்? எத்தனை பேர்—பட்டதாரிகள்—வாணிபத் துறையை வளமுறச் செய்தார்? எத்தனைபேர் தொழில் துறைகளில் முன்னேற்றம் அடைந்துள்ளார்? எத்தனை பேர் நமது நாட்டின் உயிர் நிலையான விவசாயத்தினைப் பேணி நிற்கின்றார்? ஆனால் ஸர் பி. ஸி. ராய் அறிவுக் கலைகளில் பயிற்சி பெற்றிருப்பதோடு, விசேஷ உலக அனுபவமும் வாய்ந்தவர்—தொழில் முயற்சிகளிலும் வல்லவர். கட்டுப்பாட்டுக் குட்பட்டு, ஒழுங்காக இரசாயனத் தொழில் செய்து—வாணிபம் செய்து—தேசமுன்னேற்றத்திற் குழைக்கும் கூட்டத்தினரை வங்க நாட்டில் தயார் செய்தவர் பி. ஸி. ராய் என்னும் தேசபக்தமணியே யாவர்.

ஆராய்ச்சியாளராகவும் போசிரியராகவும்தொழில் நிபுணராகவும்விளங்கும் இப்பெரியார் தமது மனமெய்மொழிகளைத்தாய்நாட்டிற்கே உரிமையாக்கியுள்ளார். 'கைங்கரிய நெறியே முத்தி நெறி' என்னும் தனிப்பெருங் கொள்கையோடு உழைத்து வரும் இவர், 'கதர் இயக்கமே நாட்டு வறுமைக்கு நன்மருந்து' எனக் கண்டுபிடித்தது ஓர் ஆச்சரியமன்று. கோடிக் கணக்கான மக்கள் கொடிய வறுமை நோய்க்கும் பஞ்சத்திற்கு மிரையாகக் கழிகின்றனரே! அந்தோ! இவரைக் காக்க வழியில்லையா—என்று இரங்கி நைந்து உருகிய பி. ஸி. ராயின் உள்ளத்திற்கு மகாத்மா காந்தியின் 'தர்ம சக்கரம்' ஆறுதல் அளிக்கலாயிற்று. இத்தகைய நாட்டுப் பற்று வாய்ந்த நல்லறிவாளர் பி. ஸி. ராய், பல்கலைக் கழகப் பட்டம் அளிப்பு விழாவில் நிகழ்த்திய பேருரையினை, அவர் தம் நீண்ட அனுபவத்தில் விளைந்து கனிந்த நறுங்கனி யென்றே கூறுதல் வேண்டும். இவ்வுரையில் தேசபக்தி நிறைந்து ததும்புகின்றது; உண்மையொளி பொங்கிச்சுடர்கின்றது; உயர்ந்தலட்சியங்கள் பொலிகின்றன; ஏழை மக்கள்பால் இவர்க்குள்ள கருணை, இரக்கம், அன்பு, அலைமேல்அலையெறிந்தொழுகுகின்றன. சுருங்கக் கூறுமிடத்து, ஸர் பி. ஸி ராய் செய்துள்ள மகோபந்யாசத்தில், ஒப்புயர்வற்றதோர் உத்தம தேச பக்தமணியின்—தியாக மூர்த்தியின்—ஜீவநாடி துடிக்கின்றது.

முதற்கண், இப்பேருரையில் நாம் கவனிக்கவேண்டிய பொருள் என்னை? நமது பல்கலைக் கழகங்கள் பலவற்றிலும் மாணவரைப் பிடர்பிடித்துந்தும் பேராவா எது? பட்டம்பெற வேண்டுமென்ற பேராசையன்றோ? ஏ. பி. என்று ஆரம்பித்து, பி. ஏ. என்று முடிப்பதே கல்வியென்று பலரும் மயங்குகின்றார். பட்டவேட்டை—பதவி வேட்கை, இவையோ கல்வியின் பயன்? ஐயோ!— பி. ஏ. எம். ஏ. பி. எல். எம். எல். என்னும் பட்டங்களைச் சுமக்க விரும்பி, எத்தனை இளைஞர் தமது இளமையினையும் ஆருயிரையுங் கூட இழக்கத் துணிகின்றார்! எத்தனை பேர் பி. ஏ. பட்டம் எனும் பூதத்தின் பலி பீடத்தில் தம் அறிவையே பலியாகக் கொடுக்கின்றார்! சொந்த அறிவின்றி வெள்ளையர்தம் இரவல் அறிவு பூண்டு மகிழ்பவரன்றோ, நம் பட்டதாரிகள்! இங்ஙனம் பி. ஸி. ராய் வருந்துகின்றார்; கவல்கின்றார்.

கோகலேயைப் பார்; காந்தியைப் பார்; திலகரைப்பார்; ஜெகதி அரவிந்தரைப்பார்; தாசரை போஸை தாகூரைப்பார்—இவர் தற்கால ஆங்கிலக் கல்வியின் கனிகளல்லரோ! என்று கூறி யமைவதில் பொருளேயில்லை. ஆங்கிலக் கல்வியால் இன்று சிறந்த நற்பயன் பெற்றவர் மிகமிகச் சிலரேயாவர். ஆனால் பலருக்கும் இக்கல்வியால் சிறந்த பயன் விளையவில்லை என்பது வெளிப்படை. நமது கல்விமான்களில் எத்தனைபேர் பொருள் தேடிக் குவிக்கின்றார்? அறிவுச் செல்வத்தையாவது உண்மையாக அனுபவித்து இன்புறுவோர் எத்தனை பேர்? ஒழுக்க நெறியினையும் ஆன்மசக்தியினையும் தற்கால ஆங்கிலக் கல்வி எவ்வாறு பேணுகின்றது? வேலையில்லாத திண்டாட்டம் ஆண்டாண்டுதோறும் அதிகரித்து வருகிறதன்றோ? இக்குறைகளை யெல்லாம் கல்வி வேரோடு களைந்தெறிய வேண்டுமென்று ஸர் பி. ஸி. ராய் கூறுகின்றார். உபாயமென்னை? தம் வாழ்க்கையில் ஜீவனோபாயம் தேடிக்கொள்ள விரும்புவோர்க்கு அன்னார்க்கு ஏற்ற கல்விப் பயிற்சி அளிக்கப்பெறல் வேண்டும். புத்தம்புதிய துறைகளில் ஆராய்ச்சி அறிவினைச் செலுத்தும் ஆற்றலில்லார்க்கு உயர்ந்த பயிற்சி அவசியமில்லை. இது பி. ஸி. ராயின் கருத்து. தொழிற் கல்விக்குரிய வசதிகள் அமைக்கப்பெற்றால் உயர்தரக் கல்வியில் விருப்பமில்லாதவர் தங்கள் தங்கள் ஆற்றலுக்கேற்ற துறைகளைத் தேர்ந்துகொள்ளுதல் கூடும். இங்ஙனம் கூறிவிட்டு, பிறப்பாலும் பதவியாலும் ஒருவருக்கு உயர்தரக் கல்வி விஷயத்தில் யாதொரு தடையும் ஏற்படலாகாதென்று பி. ஸி. ராய் வற்புறுத்துகின்றார். அறிவுத்தாகமுள்ளவரெல்லாம் அறிவுப்புனல்பருகி இன்புறுதல் வேண்டும். இதுவே பல்கலைக் கழகங்களின் பெருநோக்காக அமைதல் வேண்டும்.

தொழிற் கல்வி பெரும்பாலார்க்கென்றும் உயர்தர அறிவுக் கல்வி சிலர்க்கென்றும், இவ் இருதுறைகளும் ஒருங்கே போற்றப் படுதல் வேண்டும் என்றும் பி ஸி. ராய் கூறுகின்றார். ஆராய்ச்சி விஷயத்திலும் மனத்தினைக் கூரியதாக்கி விஷய பரிசீலனை செய்யும் துறைகளிலும் சொந்த மதிகொண்டு புத்தப் புதிய உண்மைகளைக் காணும் முறைகளிலும் கவனித் தொழுக வேண்டிய குறிப்புக்களை பி. ஸி. ராய் வெளியிட்டுள்ளார். இவற்றை யெல்லாம் நமது பல்கலைக்கழகங்கள் கடைப்பிடித்தொழுகல் நலமாகும். முக்கியமாக நாட்டின் நலங்களுக்கும் தேவைகளுக்கும் நாகரிகப் போக்கினுக்கும் ஏற்பவே கல்விமுறைகள் சீர்திருத்தி அமைக்கப்பெறுதல் வேண்டும். தாய்மொழி வாயிலாக அறிவுச் செல்வத்தினை மாணக்கர்க்கு உதவ முற்படுதல் வேண்டும். அன்னிய மொழி வாயிலாக அறிவுக்கலைகள் பயில்வதில் அனாவசியமான காலமும் பொருளும் பிராணசக்தியும் வீண் செலவாகின்றன.* இவ்வாறு காலத்திற்கேற்ற—நாட்டிற்கேற்ற சீர்திருத்த முறைகளை எடுத்துக்காட்டியதற்காக பி. ஸி ராய் அவர்களுக்குப் பொதுவாக நாட்டு மக்களும் சிறப்பாக நம் கல்விமான்களும் நன்றியறிதலோடு கூடிய வந்தனத்தை உரிமை செய்வாராக!

## உண்மை எது?

'உண்மையை நாடவேண்டுமே'ன்ற தலைப் பெயரோடு 'ஊழியன்', 'குமரன்'மீதுள்ள சீற்றம் தோன்ற ஓர் கட்டுரை வரைந்துள்ளான். "'ஊழியனு'க்கு காந்தி தருமமும் தர்க்க முறையும் தெரியாது" என்று யாம் யாண்டும் கூறியதில்லை. கூற வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை. 'ஊழியன்' எக்காரணம் பற்றி இப்பொருளினை வலிந்தும் நலிந்தும் கொண்டுள்ளான் என்பதை நாம் அறிய விருப்பமில்லை. காந்தியடிகளின் வாயிலாக இந்நாள் தோன்றி நிலவும் அஹிம்சா தர்மத்திற்கு முஸ்ஸோலினியின் கொடுஞ் செயல்கள் எவ்வாறு பொருத்தமுடையன என்பதே எமது வினா. இவ் வினாவிற்கு நேரான விடையிறாது மறைந்து நின்று சொல்லம்புகளைத் தொடுப்பதால் நற்பயனொன்றும் விளைவதில்லை. "குமரனுக்கு தனித்து மறுப்பு எழுதகவில்லையென்று" கூறும் 'ஊழியன்' 'காக்கை உட்கார்ந்ததும் பனம் பழம் விழுந்தால் பழம் விழுந்தது காக்கை உட்கார்ந்ததின் பயன்'குமா என்று எள்ளி நகையாடுகின்றான். இது முன்னுக்குப்பின் முரண்படுவதன்றோ? 'குமரனை' உள்ளிட்ட பல பத்திரிகைகளுக்கும் மறுப்பு எழுதப்பட்டதென்பது 'ஊழியன்' வாசகத்தினின்றும் இனிது பெறப்படுகிறதன்றோ? எனவே மறுப்பிற்கு விடையிறுப்பது 'குமரன்' கடனாகும்.

அபிப்பிராயம் என்ற பதத்திற்கு அகராதியின்படி மூன்று பொருளுண்டு. ஒன்று, நோக்கமென்பது (aim, intention, wish). இரண்டாவது பொருள் எண்ணம், புத்திமதி (opinion, advice). மூன்றாவது பொருள் உட்கருத்து. தீர்ப்பு என்பது நியமம், நிவிர்த்தி, முடிப்பு என்று பொருள்படும். எனவே அபிப்பிராயமென்பது முடிவு கட்டுவதாகாது. இவ் வேறுபாட்டினை உணர்வதற்கு அகராதி கூட வேண்டுவதில்லை. உலக வழக்கிலும் இவ்வேற்றுமை நன்கறியப்பட்டுள்ளது. இதில் நாம் 'சொற்பிளவாற்ற'லைக் காட்டவில்லை. இவ் விஷயத்தில் "மனத்தில் தோன்றியவை யெல்லாம் ஒழுங்குபடுத்தாமல் பேசத் துணிபவர்" யார் என்பதை இரண்டு பத்திரிகைகளையும் ஒப்பிட்டு நோக்கும் வாசகர் அறிவர். 'தருக்கமுறை'யில் எமக்கு நம்பிக்கையுண்டு. ஆனால் தருக்க முறை யென்ற பெயரைச் சொல்லி, குதர்க்கம் செய்வது தகுமா? சிலரை எப்போதும் ஏமாற்றிவிடலாம். பலரையும் சில காலம் ஏமாற்றலாம். எல்லாரையும் எப்போதும் ஏமாற்றமுடியாது என்று கூறும் அறிஞர் வாக்கினை 'ஊழிய'னுக்கு நினைப்பூட்டுகின்றோம்.

"நெருக்கடிக்காலத்தில் ஜனநாயகக்கொள்கையை அனுஷ்டானத்தில் காண்பிக்கமுடியாது" என்று எத்தகைய கொடுமைகளுக்கும் அதிகாரப் பெருந்தெய்வங்கள் சமாதானம் கூறுதல் கூடும். 'ஏகதேச்சாதிகாரம்' நெருக்கடியான காலங்களில் ஒருவனுக்கு அளிக்கப்பெறுவது நன்று அன்று என்பது விவகாரமன்று. 'ஏகதேச்சாதிகாரம்' முஸ்ஸோலினியால் எவ்வாறு உபயோகப்படுத்தப் பெற்றது என்பதுதான் வாதத்திற்குரிய விஷயம். காந்தி ராஜ்யத்திலும் இராம ராஜ்யத்திலுங்கூட ஏகதேச்சாதிகாரம் சமயவிசேடங்களில் பற்பல காரணச் செறிவுகளால் ஒருவனுக்கு வழங்கப்பெறலாம். ஆனால் முஸ்ஸோலினியின் ஏகதேச்சாதிகாரம் இராவண ராஜ்யமாக்வே விளைந்து விட்டதென்று தந்திச் செய்திகள் கூறுகின்றன. "அரக்

 

உ
சிவமயம்.
மரகத விநாயகர் துணை.

# தொண்ணூற்று நூர்க் கூட்டம்.

## புரட்டாசி ௫, ௬-தேதிகளில் கோவிலூரில் கூடியது.

ஏராளமான பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

### தீர்மானங்கள்.

௧. முன் வருஷத்தில் செய்திருக்கிற தீர்மானங்களை அனுஷ்டித்து வருகிறது.

௨. தொண்ணூற்றுநூர்க் கூட்டத்திற்கு வரிப்பணம் அந்தந்த ஊர் நகரத்தார்களே புள்ளிகளிடம் வசூலித்துக் கூட்டத் தேதிக்கு ஒருமாத முன்பாக தனவைசிய சமூக ஊழியசபைக்கு அனுப்புகிறது. பாக்கிப்படும் வரிப்பணத்துக்கு ஒன்று வட்டிவீதம் சேர்த்து வசூலித்தனுப்புகிறது. இந்த வருஷத்தில் பாக்கிப்பட்டால் அதற்கு ஷ வட்டிவீதம் சேர்த்து வசூலித்தனுப்புகிறது.

௩. தனவைசிய சமூக ஊழியசபைக்கு அங்கத்தினர்களை ஐப்பசிமீ ௩௰உ க்குள் ஒவ்வொரு ஊர் நகரத்தாரும் தேர்ந்து எடுத்துத் தெரிவிக்கிறது. அதற்குள் குறிப்பிட்டுத் தெரிவிக்காத ஊர்கட்கு தனவைசிய சமூக ஊழியசபையாரே அங்கத்தினரை நியமித்துக்கொள்கிறது.

௪. தொண்ணூற்றுநூர்க் கூட்டங் கூடுவதற்காக ஏற்படுத்தியிருக்கிற புரட்டாதிமீ பௌர்ணிமை யன்று குறிப்பிட்ட நேரத்தில் எல்லா ஊர் நகரத்தாரும் வந்துசேருகிறது. வராத ஊர் நகரத்தார்கள் வந்திருக்கும் நகரத்தார் செய்யும் தீர்மானத்தை ஒப்புக்கொள்கிறது.

௫. தீர்மானங்களை மீறிய விஷயமாக வந்திருக்கும் மனுக்களை தனவைசிய சமூக ஊழியசபையார் நன்கு விசாரணை செய்து உண்மையானால் அடுத்த தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தில் விதாயஞ் செயது கொள்ளுகிறது.

நகரத்தார்,

குறித்தபடி அட்சயஆு புரட்டாசிமீ ௫உ மங்களவாரம் பிற்பகலில் பலவூர் நகரத்தாரும் கோவிலூருக்கு விஜயஞ் செய்திருந்தார்கள். நகரத்தார் வரவேண்டியிருந்த சில ஊர்கட்குத் தகவல் கொடுக்கப்பெற்று புதன்கிழமை வந்து சேர்ந்தார்கள். இரவு சுமார் ௬-மணிக்குக் கூட்டம் ஆரம்பமாகி நடைபெற்றது. ரங்கூன் நாட்டுக்கோட்டை நகரத்தாரவர்களும் ஸ்ரீமான் ஸர். மு. சித. முத்தையாசெட்டியார் அவர்களும் அனுப்பியிருந்த வாழ்த்துத் தந்திகள் படிக்கப்பெற்றன. இரங்கூன் நாட்டுக் கோட்டையார் சங்கத்தாரும் ஷியூர் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தாரும் கூட்டத்தில் கவனிக்கும்படி அனுப்பிய தீர்மானங்களும், காசி சத்திரம் பார்வைக்காரரின் வேண்டுகோளும் நகரத்தாருக்கு வந்திருந்த மனுக்களும் படிக்கப்பெற்றன. கூட்டமானது இரவு இரண்டு மணிக்கு வெகு உற்சாகத்துடனும் ஊக்கத்துடனும் நிறைவெய்தியது. நகரத்தார் சுமார் இரண்டாயிரம்பேர் விஜயஞ் செய்திருந்தார்கள். வரிப்பணம் பெரும்பாலாக வசூலாகிவிட்டது. கூட்டம் முடிந்த பிறகு பல ஊர் நகரத்தார் தாங்கள் வசூலித்துக் கொண்டுவந்திருந்த பணத்தைச் செலுத்தினார்கள். புள்ளி விவரமும் பணம் வசூலான ஊர் விவரமும் பாக்கியிருக்கிற ஊர் விவரமும் அடுத்த அனுபந்தத்தில் வெளியிடப்பெறும்.

வேண்டுகோள்.

தனவைசிய சமூக ஊழிய சபைக்கு நகரத்தார் தீர்மானப்படி ஒவ்வோர் ஊரிலும் ௩00 புள்ளிகள் வரை ஒரு அங்கத்தினரும், மேலே ஒவ்வொரு முன்னூறு புள்ளி வரை ஒவ்வொரு அங்கத்தினருமாக நாளிது ஐப்பசிமீ ௩0உ க்குள் தேர்ந்து தெரிவிக்கும்படி ஒவ்வொரு ஊர் நகரத்தாரையும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

**குரோதனஆு ஆவணிமீ ௨௬உ முதல் அக்ஷயஆு ஆவணிமீ ௧௮உ வரை**
**தனவைசிய சமூக ஊழிய சபை, வரவு செலவு கணக்கு.**

| | | | |
|---|---|---|---|
| சித்திவிநாயகர் வரவு ரூ. | 0-அ-0 | செலவு ரூ | ௩௫௫0-௫-௬ |
| திருநெல்லை அம்பாள் சமேத | | நெற்குப்பை மு.ரு. பழ. மு. | |
| கொற்றவாளீசுவரர் வரவு ரூ. | ௧௬-அ-0 | அ பற்று ரூ. | ௧00-௪-0 |
| சிவசுப்பிரமணியர் வரவு ரூ. | 0-அ-0 | வலையபட்டி மு. பெரி. லெ. | |
| ஆதாய வரவு ரூ. | ௭-௧௧-௬ | பற்று ரூ. | ௧௫௩-அ-0 |
| வரிப்பண வரவு ரூ. | ௫௬௩௬-௧௨-0 | மகிபாலன்பட்டி மு. சி. பற்று ரூ. | ௪௪-அ-0 |
| | | உண்டியல் மூலம் ஈந்தட்டா | |
| ஆக வரவு ரூ. | ௫௬௬௧-௧௫-௬ | நா. மு. நா. கடை பற்று ரூ. | ௨௦00-0-0 |
| | | இருப்பு ரூ. | ௧௧௩-௬-௩ |
| | | ஆக பற்று ரூ. | ௫௬௬௧-௧௫-௬ |

குறிப்பு:—வலையபட்டி மு. பெரி. லெ. வும், மகிபாலன்பட்டி மு. சி வும் மேற்கண்ட பாக்கியை பின்னர் செலுத்திவிட்டார்கள்.

தனவைசிய சமூக ஊழியசபையார்.

...ரலம் வேண்டுமே, ஆனல் அரக் ...ட்போல உபயோகியாதே.''— ...பழ ஷேக்ஸ்பியர் கொள்கை.

இந்தியன் ஸோஷல் ரிபார்மர்' ... கட்சியையும் சாராது, பட்ச ...மின்றி, அபிப்பிராயங்களை வெளி ...ம் பத்திரிகை. எனவே அது ...நிலை பிறழாது அபிப்பிராயம் ...டுக்கும்' பத்திரிகை என்பதை ... மீண்டும் வலியுறுத்துகின்றோம். ...ழையாமை விஷயத்தில் மகாத் ...காந்தியோடு அபிப்பிராய பேதம் ...ண்ட காரணத்தால் 'இந்தியன் ...ஷல் ரிபார்மர்' 'நடுநிலை ...ழ்ந்த'தெங்ஙனம்? மகாத்மா ...டு கருத்து வேற்றுமைகொண்ட ...னைவரும் நடுநிலை பிறழ்ந்தவ ...ன்று 'ஊழியன்' கூறத் துணி ...ரு? மேலும் முஸ்ஸோலினி ...யம் நமது நாட்டிலுள்ள அரசி ... கட்சி ஒன்றினையும் சார்ந்த ...து. இத்தகைய வெளிநாட்டு ...யத்தில் பேர்பெற்ற பத்திராதி ...ன திரு. நடராஜன் (ஸோஷல் ...ர்மர் பத்திராதிபர்) 'நடுநிலை ...ழ்ந்து' அபிப்பிராயம் கொடுப்ப ...துக் காரணம் என்னை? 'காரண ...றிக் காரியமில்லை' என்னும் ...மைகண்டுள்ள 'ஊழியன்' இவ் ...யத்தில் மயங்கி மெலிந்து நிற் ...னன்?

...து நிற்க. சட்ட மறுப்பிலும் ...தாழையாமையிலும் முன்னணியில் ...வரெனக் காலஞ்சென்ற தாசர் ...மானல் புகழப் பெற்றுள்ள ஒரு ...ல் நடத்தப் பெறும் 'தமிழ்நாடு' ...விஷயமாகக் கூறுவதையாவது ...ழியன்' தன் வாதப்படி ஏற்றுக் ...ள்ள வேண்டுமன்றோ? அது வரு ...து:—

இந்தியாவில் மகாத்மாகாந்தி அஹிம் ... தர்மத்தை உபதேசித்து வரும் ...து, இத்தாலியில் முதல்மந்திரி ...சலோனி பலாத்கார உபதேசஞ் ...ய்கிறுர். இத்தாலியில் தற்சமயம் ...க்கொ ராஜ்யம் நடைபெறுகிற ...ன்று தெரிகிறது. முசலோனிக்கு ...ரோதமாக எந்தப் பத்திரிகையும் ...த முடியாது. பார்லிமெண்ட் ...ச்சுவிடக்கூடாது. முசலோனி ...ல்வதற்கெல்லாம் தலையசைக்க ...ண்டும். இல்லாவிட்டால் அங்கத் ...னர்கள் ஜெயிலைப் பார்க்க வேண்டி ...துதான். தொழிலாளர் வேலைநிறு ...ம் என்ற பெயரையே உச்சரிக்க ...டாது. மௌனமாய் வேலை செய் ...விட்டால் பீரங்கி வாய்க்கு இரை ...க வேண்டியதுதான். பொதுவாக ...சலோனிக்கு விரோதமாக யாரும் ...சக்கூடாது. இம்மாதிரி பயங்கர ...ஜ்யம் நடத்தி வருகிற ஒரு ராஜ்யத் ... அவரைக் கொல்ல முயற்சி நடப் ... அதிசயமல்ல. இதுவரை எத்த ...யோ பேர்கள் முயன்றும் பலிக்க ...லை. கடைசியாக சென்றவாரத்தி ...ல் ஒரு வாலிபன் முயன்றான். ...ன் ஜனங்களால் வதை செய்யப் ...டுக் கொல்லப்பட்டான். அதற்கு ...ன்பு முசலோனி இன்னும் அதிக ... ஆர்ப்பாட்டஞ் செய்வதாகத் தெ ...றது. பெரிய பெரிய கல்விமான் ...யெல்லாம் அடிப்பதும், துன்பு ...துவதும், ஜெயிலில் போடுவதும் ...களுக்குத் தீவைப்பதும் இத்தாலி ... சர்வ சாதாரணமாயிருக்கிறது. ...மாதிரி கொடுங்கோன்மை நிலை ... நிற்காதென்பதை உலக சரித் ...ம் காட்டுகிறது. தவறாய் நடப்ப ...கள் கெட்டுப்போவார்கள் என் ...த நேரில் பார்த்திருந்தபோதிலும் ...ப்படியும் தவறுசெய்ய முயலுவது ...திரின் சுபாவம். அதைப்போல, உலக சரித்திரம் என்ன போதித்த போதிலும், முசலோனிக்கு தற்கால முள்ள அதிகார மமதை அவைகளை லட்சியஞ் செய்யாது.

'தமிழ் நாடு' கூறுவதினின்றும் முஸ்ஸோலினிக்கு விரோதமாக எழுந்த சதியாலோசனைகளுக்குக் காரணம் இன்னதென்பது இனிது புலனுகின்றது. 'காரணமின்றிக் காரியம் இல்லை' என்பது இவ்விஷயத்தில் மாத்திரம் ஏன் 'ஊழியனு'க்குப்புலப் படவில்லை?

சௌரிசௌராக் கொலைக்கு காந்தி காரணரல்லர் என்பது உண்மையே. முஸ்ஸோலினியைப் போல் காந்தி கட்டுப்பாடு பெற்ற ஓர் அரசாங்கத்தைத் தம் எதேச்சாதிகாரத்தால் அமைத்தவரல்லர். எனினும் காந்தி ஒத்துழையாமை இயக்கத்தையே நிறுத்திவிட்டார். முஸ்ஸோலினி இவ்விஷயத்தில் எவ்வாறு நடந்துகொண்டிருக்கிறுர்? அஹிம்சா தர்மத்தை ஏற்றுக் கொள்ளாதாருள் பேரறிஞர் இல்லையென்று யார் கூறுகின்றுர்? தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியில் தலைசிறந்து விளங்கும் க்ரோஸ் என்பவரை உலகம் பேரறிஞரென்று கூறுகின்றது. குமரன் மாத்திரமா அவ்வாறு கூறுகின்றுன்?

ரௌலட் சட்டம் முதலிய கொடிய சட்டங்களும் 'பொதுஜன சம்மதத்தை ஏற்றன' வென்றே 'ஊழியன்' வாதப்படி கொள்ள வேண்டுமன்றோ? ராய்ட்டர் கம்பெனியார் இத்தாலி விஷயத்தில் பட்சபாதம் காட்டுவதற்கு ஏதுவில்லை என்பதுதான் எமது வாதம். போர்க் காலத்தில் இத்தாலியும் இங்கிலாந்தும் விசேட நட்புரிமை பூண்டிருந்ததென்பது உலகமறிந்ததே. இந்நட்பின் திறத்தால் ஏற்கெனவே இருந்த ஓர் உடம்படிக்கையினையும் மீறி இத்தாலி ஜெர்மனியோடு சாராது நின்றதன்றோ?

இராமன், கண்ணன் கதைகள் வாதத்திற்குப் பொருத்தமற்றன வென்று நாம் கூறியதற்கு 'ஊழியன்' தரும் விடை அதற்குரிய விதண்டாவாத சாமர்த்தியத்தினையே வெளியிடுகின்றது.

காந்தி தர்மத்திற்குச் சூத்திரங்கள் ஏற்பட்ட போதிலும் 'ஊழியன்' தன் வியாக்கியானங்களாலும் விதண்டாவாதத்தாலும் உண்மையை மறைத்து விடமாட்டான் என்பதற்கு என்ன ஆதாரமிருக்கின்றது?

இவ்வாதத்தில் எமக்கெட்டிய செய்திகளைக்கொண்டே எமதுஉள்ளக்கருத்தினை நாம் உள்ளவாறு வெளியிட்டு வந்தோம். 'இது மொட்டை உண்மை'யுமன்று; 'சோம்பல் வேதாந்தமு'மன்று; 'திண்ணைப்பேச்சு' மன்று— என்பதை 'ஊழியன்' நன்குணர்ந்து கொள்வானாக.

## எண்டிசைக் காட்சி.

### நல்ல காலம்.

மைசூர்கவர்ண்மெண்டின்தொழில் இலாகா டைரெக்டர் சமீபத்தில் வெளியிட்டிருக்கும் அறிக்கையிலிருந்து சில குறிப்புக்களை 'சுதேசமித்திரன்' எடுத்துக்காட்டி, தான் ஒரு குறிப்பெழுதி யிருக்கிறது. "ஆங்காங்கு நூற்கும் நூலை வாங்கிக்கொள்வதற்கு ஒருமத்தியஸ்தாபனம் ஏற்படுத்தக்கூடும். ஒருமத்திய இடத்தில் பஞ்சின் கொட்டையை எடுத்துப்பட்டை போட்டு அனுப்புவதற்கு அதிகச்செலவாகு மாதலால் ஆங்காங்கு இந்தவேலையைச் செய்யப் பழக்கிக்கொள்ளவேண்டிய அவசியம். கூடியசீக்கிரத்தில் இதற்குவேண்டிய கருவிகளைப் பெருவாரியாகத் தயாரித்து வைக்கப்படும். வேண்டியவர்கள் வாங்கிக்கொள்ளலாம். கொட்டையெடுக்கவும் பட்டைபோடவும் கற்றுக்கொள்ள விரும்புவோர் பலரிருக்குமிடங்களில் அந்த வேலைகளைக் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தல் கூடும். இதுசம்பந்தமான எல்லாத் தகவல்களையும் கொடுக்கத்தயாராயிருக்கிறோம்" என்ற குறிப்புக்கள் டைரெக்டரின் அறிக்கையில் காணப்பெறுவது நமக்கு அளவிலாமகிழ்ச்சியைத்தருகின்றது. ஒரு நாட்டிலுள்ள சாதாரண ஜனங்கள் தொழில் முறையில் சிறக்கவேண்டுமாஞல் அரசாங்க உதவி இன்றியமையாததாகும். நமது கதரியக்கத்தில் அரசாங்கத்தாரும் அரசாங்கத்தைச்சார்ந்து நிற்பாரும் காட்டிவரும் அலட்சியத்திற்கு ஓர் எல்லையில்லை. என்றாலும் உலகெலாம் போற்றும் காந்தியடிகளின் ஆன்மபலங்கொண்டு ஓரளவு கதராடை உயிர்பெற்றுவளர்கின்றது. ஏழைமக்களின் உடலில் உயிரைப் பொருந்தச்செய்யும் சஞ்சீவியாகிய கதரியக்கத்தில் அரசாங்கத்தாரும் கலந்து உதவிபுரிவார்களாயின், நாட்டில் வறுமை நோய் தலை காட்டுமோ? மைசூர் அரசாங்கத்தொழில் இலாகா டைரெக்டர் அறிக்கையின்படி மைசூர் அரசாங்கம் முனைந்து நிற்குமாயின், சிலநாட்களில் மைசூர் நாடு முற்றும் கதர்மணம் கமழுமென்பதில் ஐயமில்லை. தன் குடிகளின் தகுறையை உணர்ந்து நிறைவுசெய்ய முன்னிற்கும் மைசூர் மன்னர் வாழ்க!

### வெம்பி உதிர்கின்றனர்.

சமீபத்தில மிஸஸ் எலிஸபெத் லாங்லி என்னும் ஒருமாது இங்கிலாந்தில் இறந்துபோனுள். அவளிறக்கும்போது அவளால் உற்பத்தியாக்கப்பெற்ற சந்ததிகள் நூற்றைம்பத்திரண்டுபோராம்! மக்களும் பேரரும் அவர்களின் மக்களும் அவர்களுக்குப்பிள்ளைகளும் இருக்கின்றனராம்! இரண்டு வருடங்களுக்குமுன்பு தமது தொண்ணூற்றேழாம் வயதில் இறந்த மிஸஸ் பிளவர் என்னும் மாது நூற்று எழுபத்தொன்பது சந்ததிகளை விட்டுச் சென்றுளென்று தெரிகிறது. இம்மாதிரியாகப் பலமுடைய சந்ததிகளை உலகிற்கு நல்கி மகிழ்ச்சியுடன் தாங்கள் பிரிகின்றனர். நமது தமிழ்நாட்டிலும் இத்தகைய மூதாட்டிகள் முன்னுளில் பலர் இருந்திருக்கின்றனர். இப்பொழுது பிஞ்சிலும் பூவிலும் வெம்பி உதிர்கின்ற மாதரே பாண்டும் காணக்கிடக்கின்றனர். ஒருபிள்ளை காண்பதும், வரவரக்குதிரைக் கொம்பாகி வருகின்றது, ஒருகுழந்தையைப் பெற்ற இளம்பெண்களின உடலைனது நிராத நோய் வாய்ப்பட்டு அழிவதையும் காண்கின்றோம். நோயிலா உடலோடு வாழ்ந்திருக்கும் மாதர்களைக் காண்பது அருமையாகிவிட்டது. முக்கியமாகச் செல்வர்களிடையில் இந்நிலையானது நாளுக்குநாள் மிகுந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். இக்கொடுமைக்கு மூலகாரணங்களாக நிற்பன இரண்டே. ஒன்று, இளமைமணம்; மற்றொன்று உழைப்பின்மை. இவ்விரண்டு பேய் வாயில் புகுத்தப்பட்டு இந்நாட்டு மாதுநல்லார் உடலையும் உயிரையும் இழக்கின்றனர். வைரம் பாய்ந்த உடலோடு எண்ணற்ற புதல்வர்களை ஈன்று ஐந்து தலைமுறை வரையும் தன் சந்ததிவளர்ச்சிநோக்கி மகிழ்ச்சியுடன் இவ்வுலகவாழ்வை விட்டுச் செல்லவேண்டிய மக்கள் பிஞ்சிலும் பூவிலும் வெம்பிஉதிர்வதும், தலைவிதி யென்று காரணம் கூறுவதும் அறிஞர் எள்ளிநகையாடத்தக்கனவாகும். இந்நாட்டுமக்கள் முற்காலத்தறிஞரைப்போன்று பிரமசரியத்தையும் உழைப்பையும் உயிரெனக்கொள்வாராயின் நன்னிலையடைவது திண்ணம்.

### சோக்கநாதபுரம்.

இவ்வூருக்கென தபால் நிலையம் ௧—௧௨—௨௬ தேதியன்று ஏற்படுத்தப் பெற்றிருக்கிறதென்வும் கடிதம் எழுதுவோர் இவ்வூர்த் தபாலுக்கே எழுதலாமெனவும் ஒரு நிருபர் தெரிவிக்கிறுர்.

## தந்திச் செய்தி.

சைகோன், கார்த்திகைமீ ௧௫உ

உண்டியல் விலை நூற்றுமுப்பத்தைந்து.

சிங்கப்பூர் வட்டம் பதினுறு.

பினங்கு, கார்த்திகைமீ ௧௫உ

சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்தைந்து.

ஈயம்விலை நூற்று ஐம்பத்தைந்து.

ரப்பர் விலை எண்பத்திரண்டு.

இரங்கூன் கார்த்திகைமீ ௧௫உ

| | |
|---|---|
| படகு நெல் | க௮0 |
| ரயில் நெல் | கஎ௫ |
| மீடோன் | ௫கூ0 |
| ஸ்பெஷல் | ௬௫0 |
| சிறிய மில் | ௫00 |
| நசேன் | ௬௬௫ |
| கடலை | ௧௧௫—௧௨0 |
| உளுந்து | ௫௫0 |
| தட்டைப்பயறு | ௫௨௫ |
| மிம்ப காசுக்கட்டி | ௪0௫—௪0௬ |
| சோளம் | ௬.00 |
| ஏ. ஒன் குருணை | ௫.00 |
| பி. ஷை | ௪.௮0 |
| வி. ஷை | ௪.௪0 |
| நடப்ப வட்டி | 0-௧0-௬ |
| தவணை வட்டி | 0-௪0-0 |
| பவுன் | ௧௯-௪0-0 |

### மதுரை.

(நமது சொந்த நிருபரிடமிருந்து)

தேர்தல்கள்:—சென்னை சர்வகலாசாலை செனெட்சபைக்கு மதுரை ஜில்லா போர்டின் பிரதிநிதியாக மிஸ்டர் ராபர்ட்போக்ஸ் ஏகமனதாகத்தெரிந்தெடுக்கப்பட்டார். மதுரைஜில்லா முனிசிபாலிட்டிகளின்பிரதிநிதியாக ஷை செனெட் சபைக்கு மதுரை முனிசிபல் சேர்மன் மிஸ்டர் ஆர். என். நாயுடு அதிக வோட்டுகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார். மதுரை ஜில்லா செகண்டரி கல்விசசங்கத்திற்கு மதுரை நகரிலுள்ள உபாத்தியாயர்களின் பிரதிநிதியாய் மிஸ்டர் சோமசுந்தா அய்யர் தெரிந்தெடுக்கப்பட்டார். சென்னை சர்வகலாசாலை அகாடமிக் கவுன்ஸிலுக்கு மதுரை ஜில்லா போர்டு முனிசிபாலிடிகளின் பிரதிநிதியாக ராவ்சாகிப் எம். அப்பாயிசாயுடு அவர்கள் தெரிந்தெடுக்கப்பட்டார். பாளையங்கோட்டை ஊமைப்பள்ளிக்கூடத்திற்கு கருஷாங்கிரான்சொட்ட ரூ 150 அனுமதிக்கப்பட்டது. ராமனுதபுரம் ஜில்லா போர்ட்டின் பிரதிநிதியாய் ராமனுதபுரம் ராஜா சென்னை சர்வகலாசாலை செனேட்சபைக்கு சென்ற சனியன்று தெரிந்தெடுக்கப்பட்டார், ராமனுசபுரம் ஜில்லா செகண்டரி கல்விச்சங்கத்துக்கு ராவ்சாஹிப் எம். மாணிக்கவாசகம்பிள்ளை தெரிந்தெடுக்கப்பட்டார்.

மதுரை ஜில்லாபோர்டு:—மதுரை ஜில்லாபோர்ட்டின் நவம்பர்மாசத்திய கூட்டம்சென்றசனிக்கிழமை மாலை ௩ மணிக்கு ஷை போர்டாபீசின் கட்டிடத்தில் போர்டு அக்கிராசனர் மிஸ்டர் ராபர்ட்போக்ஸ் அவர்களின் தலைமையின் கீழ் கூடியது. கருப்பட்டியில் பள்ளிக்கூடம் கட்ட ரூ ௩௫௦-ம் ஐயன்கோட்டையில் பள்ளிக்கூடம் கட்ட ரூ-௩௫௨-௫-ம் விளாம் பட்டியில் பள்ளிக்கூடம்கட்ட ரூ-௩௪௦௦ம் சிறுநாயகன் பட்டியில் பள்ளிக்கூடம் கட்ட ரூ-௩௨௫௦ம் ஏற்றம் பட்டியில் பள்ளிக்கூடம்கட்ட ரூ-௩௪௫௦ம் அனுமதிக்கப்பட்டன. உசிலயபட்டி பள்ளிக்கூடக் கட்டிடத்திற்கு மராமத்துச் செய்ய ரூ.௩.௦௦ம் உத்தமபாளையம் பள்ளிக்கூடத்திற்கு பஸ்தகங்கள் வாங்க ரூ-௧௦-௨-௦-யும் சோழவந்தான் பள்ளிக்கூடத்திற்கு ரூ-௧௨-௦-௦-ம் அனுமதிக்கப் பட்டன.

### புதுவயல்.

ஸ்ரீ சரஸ்வதி சங்கம்:—இச்சங்கத்தின் நான்காமாண்டு எட்டாவது கூட்டம் நிகழும் அக்ஷய ஆண்டு கார்த்திகைத் திங்கள் ௰-ம் நாள் சனிக்கிழமை மாலையில் கூடியது. அவ்வமயம் திரு டி. என். நடேசராவ் அவர்கள தலைமை வகித்தார்கள். பின்னர் திருவாளர்களான ஏ. வீர. பழ. வினைதீர்த்தான் "அறஞ்செய விரும்பு" என்பதைப்பற்றியும், அ. ரு. காசி "பத்திரிகைபடித்தல்" என்பதைப் பற்றியும், பழ. ராமநாதன் "ஒற்றுமை" என்பதைப்பற்றியும் வெகு அழகாகச் சொற் பெருக்கிட்டார்கள். பின்னர் கடவுள் வாழ்த்துப்பாட சபை இனிது மங்களகரமாய் நிறைவெய்தியது, என்க் காரியதரிசி திரு. பழ. ராமனுதன் எழுதுகிறுர்.

## அகில இந்திய நூல் நூற்போர் சங்கம்.

நடைமுதல் வருஷத்தில் சென்ற வருஷத்திற்காகச் சேர்ந்த அங்கத்தவர்கள் விவரம்:—

### தமிழ்நாடு.

### ஏ. வகுப்பு.

1 வி ராஜகோபாலாச்சாரியார் — திருச்செங்கோடு
2 கே நடேசன் — ,,
3 எம் எஸ் நாராயண ராவ் — ,,
4 வி பொன்னுசாமி — ,,
5 என். ராமசாமி — திருப்பூர்
6 வி எஸ் எஸ் மணி — இரங்கூன்
7 மீனாக்ஷிஅம்மாள் — ,,
8 என் நாராயண — திருச்செங்கோடு
9 பி எஸ் ராமதுரை — ,,
10 டி. எஸ் சுப்பிரமணிய அய்யர் — கும்பகோணம்
11 ராமாமிர்தம்மாள் — மல்லியம்
12 ஏ என் அகமது மொய்தீன் மீரா — அதிராம்பட்டணம்
13 டீ ஆர் மகாதேவன் — திண்டுக்கல்
14 டி ஆர் சக்கரபாணி அய்யங்கார் — சேங்காலிபுரம்
15 கே வி சுப்பா நாயுடு — மதுரை
16 வி குண்டு ராவ் — குப்பம்
17 பி ஸ்ரீனிவாச அய்யர் — மதுரை
18 கே சுப்பிரமணியம் — கோயம்புத்தூர்
19 ஏ அண்ணாமலை செட்டியார் — காரைக்குடி
20 ஏ கிருஷ்ணன் செட்டியார் — எட்டியாபுரம்
21 எஸ் ராமச்சந்திர அய்யர் — மதுரை
22 கே ஆர் கோபாலய்யர் — ,,
23 எம் ஆர் சுப்பராய சர்மா — ஆத்தூர்
24 ஜி சுப்பய்யா — ஸ்ரீபெரம்புதூர்
25 கே சந்தானம் — திருச்சங்கோடு
26 ஆர் வெங்கட்டராம் — ,,
27 எஸ் பாலகிருஷ்ணன் — மாட்டுங்கா
28 பி சுந்தரம் பிள்ளை — மதுரை
29 பி சுந்தரராஜு சேர்வை — ,,
30 ஆர் எம் ஆர் சாரங்கபாணி — ,,
31 பி கே சுந்தர நாயுடு — ,,
32 டி வி செல்லம் அய்யங்கார் — ,,
33 ஏ பி பி அமிர்தலிங்கம் பிள்ளை — பாபநாசம்
34 கலியாணசுந்தரம் — ,,
35 வி ஏ ஐயாமுத்து கவுண்டர் — ஈரோடு
36 பி எஸ் சூரியநாராயண அய்யர் — கோயம்புத்தூர்
37 X — ,,
38 வி ஸ்ரீ வெங்கடநாத் — மாட்டுங்கா
39 வி தாலெட்சுமி — ,,
40 ஜானகி வைத்தியநாத் — ,,
41 ஈ வி ராமசாமி நாயக்கர் — ஈரோடு
42 கே கணபதியப்ப பிள்ளை — கோவில்பட்டி
43 தயாலஜி சிவாஜி — சென்னை
44 எம் வி ராஜகோபாலன் — திருச்சி
45 பி என் ராஜமாணிக்கம் — தியாகதுர்க்கம்
46 டி ஜெசந்நாத் — சென்னை
47 எம் ஏ ஏ தனுஷ்கோடி நாடார் — விருதுநகர்
48 கே பி எஸ் வி பிரகாசம் — ,,
49 வி கணேசம் — கும்பகோணம்
50 ஏ மாணிக்கம் செட்டியார் — கரூர்
51 சாந்துபாய் சர்க்கார் — சென்னை
52 ஆர் டி பாபன்ன செட்டி — கும்பகோணம்
53 பி ஸ்ரீனிவாசாச்சாரி — மதுரை
54 எஸ் சங்கலியா பிள்ளை — ,,
55 ஆர் எஸ் கந்தசாமி — மாயவரம்
56 ஜி எம் ராமசாமி ஐயர் — எனக்குடி
57 எஸ் அம்புஜவல்லியம்மாள் — சென்னை
58 எஸ் முத்துசாமி — சைதாப்பேட்டை
59 என் ராமகிருஷ்ண நாயுடு — பெரியநாயக்கன்பாளையம்
60 ஏ அப்பா நாயக்கர் — கருவாலூர்
61 ஏ மாணிக்கம் செட்டி — திருச்சி
62 பி சங்கலியா பிள்ளை — தஞ்சை
63 எஸ் பி ஸ்ரீனிவாச அய்யங்கார் — அபிராமம்
64 ஆர் டீ சுப்பிரமணியன் — சேலம்
65 பி சக்கரவர்த்தி செட்டி — சென்னை
66 என் சோமசுந்தரம் செட்டியார் — வேந்தன்பட்டி
67 வி எஸ் பாஸ்கரன் — சேலம்
68 என் எஸ் சிவசுப்பிரமணியன் — கரூர்
69 வி ஆர் சுப்பபண்டாரம் — கோபிச்செட்டிப்பாளையம்
70 வி ஆர் பி சுப்பச் செட்டியார் — ,,
71 எஸ் ராமசாமி பண்டாரம் — ,,
72 ஜெ வி பாதுசாமி — கும்பகோணம்
73 ஆர் கிருஷ்ணமூர்த்தி — சென்னை
74 டீ எஸ் ராஜன் செட்டி — திண்டிவனம்
75 டாக்டர் பி சுப்பா ராவ் — சென்னை
76 எஸ் அம்புஜத்தம்மாள் — கும்பகோணம்
77 ஸ் பி கிருஷ்ண — செய்யூர்

## உள்ளூர்ச் செய்தி.

(நமது நிருபரிடமிருந்து,)

| | |
|---|---|
| மதராஸ் நடப்புவட்டி | 0—கூ—கூ |
| மதராஸ் உண்டியல் வட்டம் | 0—ச—0 |
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | க—0—0 |
| பவுன் விலை | கரு—கூ—கூ |
| வெள்ளி விலை | கூக—அ—0 |

ஸ்ரீமீனம்பிகா பந்தடிமால்:—இவ்வூரைச்சார்ந்த கா. முத்துப்பட்டணம் மீனாக்ஷியம்மன் கோவிலுக்குத் தென்பால் ஸ்ரீமீனம்பாள் பந்தடிமால் என்ற பந்து விளையாட்டுஸ்தாபனம் திருவாளர் பெரி. நா. நா. அண்ணாமலை செட்டியாரவர்களால் நாளிது கார்த்திகைத்திங்கள் கூ-ம்நாள் ஆரம்பிக்கப்பெற்றிருக்கிறதுடன் கஉ-வ மகாசபைகூட்டி திரு. அ. மு. வெ. வெங்கிடாசலச் செட்டியார் தலைவராகவும், திரு. மெ. அழ. ராம. அழகப்பசெட்டியார், திரு. மெ. சு. கி. தண்ணீர்மலைச்செட்டியார் இருவர்களும் காரியதரிசிகளாகவும் நியமிக்கப் பெற்றிருக்கிறார்கள்.

ஸ்தல ஸ்தாபன சபைக்கூட்டம்:—இவ்வூர்ஸ்தலஸ்தாபனசபையின் கூட்டமொன்று சென்ற நவம்பர்மாதம் உகம் நாள் செவ்வாய்க்கிழமை திரு. முரு. வீர. சாமிநாதன் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அப்பொழுது பலமுக்கியமான விஷயங்கள் கவனிக்கப்பட்டு முடிவுசெய்யப்பட்டன. அவைகளில் முக்கியமான சிலவற்றைக் கீழேதருகின்றோம்:—

(க) ச-வது வார்டு உஉ நெ வீட்டின் முன்பாக முத்துசாமிபிள்ளையால் $91\frac{1}{2}x2\frac{1}{4}$ விஸ்தீரணத்திற்கு செங்கல் கட்டிடத்தால் திண்ணைபோட்டு என்குரோச்மென்டு செய்திருப்பதை மூன்று தினங்களுள் எடுத்துவிடும்படி நோட்டீஸ் கொடுக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

(உ) ரு-வது வார்டுசர்வே உகளக நெ-முத்தாளம்மன் ஊருணிக்கரையிலிருந்து கிழக்கேபோகும் வீதியில் மு. வீ. ராம. சீதாராமன் செட்டியார் கரு0-சதுரஅடி இடத்தைச்சேர்த்துக் கட்டிடம்கட்டி என்குரோச்மென்டு செய்திருப்பதை மூன்று தினங்களில் எடுத்துவிடும்படி நோட்டீஸ் கொடுக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

(ங) காரைக்குடி நகருக்கு 'மின்சார சப்ளை செய்யவேண்டிய விஷயமாக அரசாங்கத்தாரிடமிருந்து வரப்பெற்ற கடிதங்கள் பதிவுசெய்யப்பட்டன. லாபத்தை உத்தேசித்து இக்கம்பெனி நடப்பதால் மாதம் ஒன்றுக்கு ஸ்தம்பம் ஒன்றுக்கு கூ-பைசா வரி செலுத்துவதன் பேரில் லைசென்ஸ் கொடுக்கலாமென்று முடிவு செய்யப்பட்டது.

(ச) யூனியனுபீஸ் வரிவசூல் செய்யும் குமாஸ்தா ரகுபதிராவை வேலைக்கு ஸ்திரம் செய்த தேதிமுதல் அவருக்கு பென்ஷனரி கண்டிரி பியூஷன் கொடுக்கலாமென்று தீர்மானிக்கப்பட்டது.

(ஞ) "ஊழியன்" காரியஸ்தர் தே வே. அருணாசலன் செய்திருந்த தொழில் வரி அப்பீல் சம்பந்தமாக யோசிக்கப்பட்டு, மனுதாரது உஉ-கக-உசு கடிதத்தில் பிரதிநிதித் தலைவரைப்பற்றியும் இதரர்களைப் பற்றியும் எழுதப்பட்டிருந்த சிலவார்த்தைகள் உண்மைக்கும் சந்தர்ப்பத்திற்கும் கவுரவத்திற்கும் முற்றும் விரோதமாயிருக்கிறதென்று என். எஸ். வெங்கட்டராமய்யரவர்கள் தெரிவித்ததன்பேரில் மனுதார் தே. வே. அருணாசலன் வரவழைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டார். வெங்கட்டராமய்யர் சில விஷயங்களை விளக்கிச் சொன்னதன்பேரில் அவர் குழ்ச்சிசெய்தாரென்று தான் நினைக்கவில்லையென்று ஒப்புக்கொண்டார். இவ்விதமாக எழுதுவது நியாயமில்லையென சபையார் அபிப்பிராயப்பட்டனர்.

(சு) தலைவர் முரு. வீர. சாமிநாதன் செட்டியார் அவர்களது கையெழுத்து சீலை சபையின் செலவிலிருந்து வாங்கிக்கொள்ளலாமென்று தீர்மானிக்கப்பட்டது.

சென்ற சனியன்று கூடியகூட்டத்தில் கவனிக்கப்பட்ட முக்கியமான விஷயங்கள் வருமாறு:—

(க) ககஉ-எ-உ அ-க்குத்தயாரிக்கப்பட்ட பட்ஜெட் எஸ்டிமேட்டை சப்கமிட்டியார் சீர்திருத்தம் செய்து சிபார்சு செய்திருக்கிறபடி அங்கீகரிக்கப்பட்டது.

(உ) ஊழியன் கம்பெனி லிமிடெட் கஅ-அ-உகு-ல் வேலைசெய்யத்தொடங்கினதாகத் தெரிவதால் உகு-உசு-ம் வருஷத்திற்கு சு-மாதத்திற்கு ஊழியன் பிரஸுக்கு விதிக்கப்பட்ட வரியை ரூ-௩0 ஆகவும் வள்ளுவர் நிலயத்திற்கு விதிக்கப்பட்ட வரியை ரூ-சு-ஆகவும் குறைத்து அப்பீலை அப்பில் கமிட்டியார் முடிவு செய்யவேண்டுமென்றும், அடுத்த சு மாதத்திற்கு பிரவிடெண்டவர்கள் ஷை ஊழியன் கம்பெனிக்கு கம்பெனி வரிவிதிக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

78 எஸ் பஞ்சரெத்னம் — திருப்பூர்
79 எம் நாராயணசாமி — ,,
80 கே திருநாராயணன் — ,,
81 வி சுப்பிரமணியம் — ,,
82 யூ எஸ் பத்மநாபராவ் — ,,
83 எஸ் பாரத்தசாரதி அய்யங்கார் — ,,
84 ஆர் கிருஷ்ணமூர்த்தி — அம்மையப்பன்
85 வி ஈ ஹரிகரன் — சென்னை
86 டி வி சாஸ்திரி — திரிச்சி
87 வரதராஜஅய்யங்கார் — நடுவக்கல்பாளையம்
88 டி கிருஷ்ணசாமி — சேலம்

### பீ. வகுப்பு.

1 என் லெட்சுமண ராவ் — சென்னை
2 முகமது இஸ்மாயில் — ,,
3 எம். கே. முதலியார் — மாயவரம்
4 டி சாமிநாத பிள்ளை — ,,

### ஸி. வகுப்பு.

1 கே ராமானுஜம் — ஈரோடு

### நன்கோடை.

1 வி ஈ ஹரிகரன் — சென்னை (10000 கஜம்)
10 ஏ குமாரசாமி பிள்ளை — திண்டிவனம்

## ராமனுதபுரம்.

### ஜில்லா போர்டு சபை.

இதன் நவம்பர்மீ கூட்டம் நவம்பர்மீ 23ந்தேதி மதுரையில் ராவ்சாஹிப் எம். மாணிக்கவாசகம்பிள்ளை அக்கிராசனத்தின் கீழ் நடந்தது. ஆரம்பத்தில் கலெக்டர் மிஸ்டர் பி. ராக்வீன் "விடுதலைக்கைதிகள் உதவிசங்க"த்தின் நோக்கங்கள், விதிகள் முதலியவற்றின் அவசியத்தைப்பற்றியும் பேசி சங்கத்துக்கு ஆதரவளிக்கவேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

மானாமதுரை கமுதி ரஸ்தாவில் கிருதமால் நதிக்குஒரு பாலங்கட்ட ரூபாய்26000, காரைக்குடி கானாடுகாத்தான் ரஸ்தா அகலப்படுத்த ரூபாய் 26306, காரைக்குடி கொத்தமங்கலம் ரஸ்தா அகலப்படுத்த ரூபாய் 65400, மாநகரி காரைக்குடி ரஸ்தாவைச்சீர்படுத்தி அகலப்படுத்த ரூபாய் 28700, மானாமதுரை திருப்பத்தூர் ரஸ்தாவை அகலப்படுத்தி சீர்படுத்த ரூபாய்47000, திருப்பத்தூர் குன்னக்குடி ரஸ்தாவைச்சீர்படுத்தி அகலப்படுத்த ரூபாய் 69700, மதுரை ராமனுதபுரம் ரஸ்தாவைச் சீர்படுத்தி அகலப்படுத்த ரூபாய் 215000, மதுரை புதுக்கோட்டை ரஸ்தாவை அகலப்படுத்தி சீர்திருத்த ரூபாய் 130000, திண்டுக்கல் வட்டாணம் ரஸ்தாவை அகலப்படுத்திச் சீர்படுத்த ரூபாய் 240000, சாங்க்ஷன் செய்யப்பட்டது. பாளையங்கோட்டை குருடர் பள்ளிக்கூடத்துக்கு ரூபாய் 100 அளிக்கப்பட்டது. ஜில்லாபோர்டு அங்கத்தினராகவும் அக்கிராசனராகவும் கனம் ராமனுதபுரம் ராஜாவை நியமித்ததற்காக சர்க்காருக்கு வந்தனமளிப்பதாய் ஒரு தீர்மானம் செய்யப்பட்டது. ஜில்லா சுகாதாரக்கமிட்டிக்கு ராவ்பகதூர் ஏ. வி. பி. எல், சிதம்பரஞ் செட்டியாருக்குப்பதிலாக ஜனுப் தொண்டி. சையது முகம்மது சாஹிப் தெரிந்தெடுக்கப்பட்டார். பார்த்திபனூர் திருச்சுழி ரஸ்தாப்போட ரூபாய் 52690 சாங்க்ஷன் செய்யப்பட்டது. ராவ்சாஹிப் எம். மாணிக்கவாசகம்பிள்ளை மீண்டும் ஜில்லா செகண்டரி கல்விச்சங்க அங்கத்தினராய் தெரிந்தெடுக்கப்பட்டார். பள்ளத்தூர் யூனியன் போர்டில் சென்ற 1921-22ம் வருஷத்தில் தொழில் வரி வசூல்செய்யாதது அந்தக்காலத்தில் அக்கிராசனராயிருந்தவரின் சொல்தியினுல்தான் நேரிட்டதென்றும், ஆகவே சர்க்கார் அவர்மீது சர்சார்ஜ் செய்யலாமென்றும், மேற்படி வரியை வஜாச்செய்ய யாதொரு தக்க காரணமுமில்லையென்றும் சர்க்காருக்குப் பதில் தெரிவிக்கப்பட்டது.

## கடிதங்கள்.

### சோக்கலிங்கம் புதூர்.

மணிவாசவமாணவர் சங்கம்:- இச்சங்கத்தின் உஎவது மாதக்கூட்டம் இம்மதி நான்காம்நாள் மாலை ௯ மணிக்கு இவ்வூர் மாணிக்கவாசக வித்தியாசாலையிற் கூடிற்று. அவ்வித்தியாசாலைத்தலைமை ஆசிரியர் திரு. ரெ. ராமமூர்த்தி ஐயரவர்கள் தலைமை வகிக்க "முருகநாயனர்" "கணநாதநாயனர்" "யுக்தியுள்ள தீர்ப்பு" "இளைஞர் முன்னேற்றம்" என்னும் விஷயங்களை முறையே ந. சுப்பராயன், ரா. அரங்கிருஷ்ணன், இலக்குமணன், ராம. அருணசலன் என்பவர்கள் சொற்பெருக்கிட்டார்கள். தலைவரவர்கள் சொற்பொருள் நயம் பொதிந்த முடிவுரையோடு மாணவர்களால் கடவுள் வாழ்த்துக் கூறப்பெற்று அவை இனிது நிறைவெய்தியது. என மணிவாசகன் எழுதுகிருர்.

### பவுண்டை.

மகாநாடு:—நிகழும் அக்ஷய ஆண்டு கார்த்திகைத் திங்கள் இரண்டாம் நாள் மாலையில் எ—ரு0 மணிக்கு பவுண்டை புத்தமத தேவாலயத்தில் இந்தியர்களின் மகாநாடு ஒன்று கூடியது. அக்கூட்டத்திற்கு அக்கிராசனராக ஸ்ரீமான் பனை. மெ. மெ. வெங்கிடாசலஞ் செட்டியாரவர்கள் பொது ஜனங்களின் வேண்டுகோட்கிணங்கி தலைமை வகித்தார். அக்கிராசனரின் முகவுரை உபந்யாசம் முடிந்தபின், அன்பு, தெய்வபக்தி என்னும் விஷயங்களைப் பற்றி திரு. ராமகிருஷ்ணபிள்ளையவர்கள் மிகமிக அழகாக உபந்யாசித்தனர். பின் காங்கிரஸ் கிலாபத் பிரசாரகராகிய ஜனுப் ஹக்கீம் அப்துல்லா சாஹிப் அவர்கள் சாந்தம், பொறுமை, அமைதி, அஹிம்சாதருமம் என்னும் விஷயங்களைப் பற்றியும் இது காலம் வரை காங்கிரஸ் சபை செய்திருக்கிற அரிய பெரிய தொண்டுகளைப்பற்றியும் ஒவ்வொருவரும் கதரணிய வேண்டிய அவசியத்தைப்பற்றியும் மிக உருக்கமாக எல்லோருக்கும் விளங்கும்படி இனிய நடையில் உபந்யசித்தார். அக்கிராசனர் முடிவுரையாக மனச்சாக்ஷிக்கு விரோதமின்றி நடக்கவேண்டுமென்றும் பயங்கொள்ளித் தனத்தை ஒழித்துச் சத்தியத்தைக் கடைப்பிடித்தொழுகவேண்டுமென்றும் பேசி முடித்தார். அதன்பிறகு அக்கிராசனருக்கும் உபந்யாசகர்கட்கும் மகாநாட்டைக் கூட்டி வைத்த கனவான்கட்கும் வந்தனமளிக்கப்பட்டபின் கூட்டம் கலைந்தது, என ஒரு அன்பர் எழுதுகின்ருர்.

## விளம்பரம்.

என்னுடைய ஸ்வீகார குமாரன் கண்ணப்பசெட்டியார் மைனர். ஷை யானை சிலதுஷ்ட்ட சினேகிதர்கள்வசப்படுத்திக்கொண்டு குடும்பத்தில் ஒத்துமையில்லாமலும் கெட்டமார்க்கத்தில் நடத்திவருகிருர்கள். பிரதிப்பிரயோஜனமில்லாமலும் யாதொரு நியாயமான காரணமில்லாமலும் அற்பிரதிப் பிரயோஜனங் கொடுத்து மிகுந்த தொகைகளுக்கும் இவ்விதம் பலவாருக ஷை யானிடம் அநேகர் நோட்டுகள் தஸ்தவேஜுகள் ஏமாத்தி வாங்குகிறதாகவும் தெரிகிறது. ஷை யானுக்கு சுமார் 3 மாதம் வயதுள்ள அண்ணாமலையென்ற ஆண் குழந்தையும் இருக்கிறது. ஷை கண்ணப்பசெட்டியாரிடம் ஆதாவுகள் எழுதி வாங்கவாவது அவனுக்கு கடன் கொடுக்கவாவது யாதொரு நியாயமான முகாந்திரமுமில்லையென்றும் அவசியமில்லையென்றும் அவனிடம் வாங்கும் நோட்டுகள் தஸ்தாவேஜுகள் சட்டப்படி செல்லாவணி ஆகாதென்றும் இதன்மூலம் எல்லோருக்கும் அறிவிக்கலாயிற்று.

சுப. அ. சுப. சுப்பிரமணியன்செட்டியார்
மதுரை 29-11-26 } நாட்டரசங்கோட்டை.

## ராமச்சந்திர ஏற்றம்.

ராமச்சந்திர ஏற்றத்தைப்பற்றி ஸ்ரீமான் ராமச்சந்திரனுக்கும் எனக்கும் பல கடிதங்கள் வந்திருக்கின்றன. சிலர் உடனே ஏற்றம் தங்களுக்கு வேண்டுமென்று கேட்கிறார்கள். மற்றவர்கள் அதைப்பற்றி நல்ல கேள்விகள் கேட்டிருக்கிறார்கள். ஏற்றம் பேடெண்டு செய்யப்பட்டிருக்கிறது. அதைக் கண்டுபிடித்தவரிடம் உடனே சப்ளை செய்யுமாறு கையில் ஏற்றங்கள் இல்லை. இனிமேல்தான் அவற்றைத் தயாரிக்கவேண்டும். பல ஆர்டர்களுக்குச் சேர்ந்தாற்போல் அனுப்ப அவருக்குவசதியில்லை. ஆகையால் துரிதமாகத் தயாரிக்க அவருக்குச் சில வசதிகள் அளிக்க நான் முயற்சி செய்துவருகிறேன். அவர் சமதா நோம் பூராவையும் இதிலேயே செலவழித்து ஏற்றம் தயாரித்துக் கொடுப்பதை மேற்பார்வை செய்யும் பொருட்டு சென்னையில் தமது சொந்த வேலையை முடித்து விட்டுவரச் சென்றிருக்கிறார். ஆகையால் ஏற்றம் சப்ளை செய்ய ஆரம்பிக்குமுன் நடக்க வேண்டிய ஏற்பாடுகள் முடியும்வரையில் சற்றுப் பொறுமையாக இருக்குமாறு கடிதம் எழுதியிருப்பவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இதன் உற்பத்தியைத் தேசத்திற்குச் சொந்தமாகச் செய்து சாத்தியமான வரையில் குறைந்த விலையை நிர்ணயிக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது.

கடிதம் எழுதுபவர்களுக்கு நான் தனித்தனியாகப் பதில் எழுதாததற்கு மன்னிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். அவர்களால் எழுதப்பட்டிருக்கும் சில விஷயங்களுக்குக் கீழே பதில் கூறியிருக்கிறேன்:-

1. இப்போது நடந்துவரும் ஏற்பாடுகள் முடிவுபெறும் பக்ஷத்தில் விரிவாக ஒரு படத்தை வெளியிட உத்தேசிக்கிறேன்.

2. அதன் பாகங்கள் சிக்கலானவையே அல்ல. அதற்குமாறாக அதன் திட்டம் நம்ப முடியாதபடி அவ்வளவு சுலபமாகவிருக்கிறது. அது கிராமத்திலேற்படும் தேவையைப் பூர்த்திசெய்யத்தான் நிச்சயமாக உத்தேசிக்கப்பட்டது.

3. சிறிது நீளமுள்ள தண்டவாளங்கள், ஜகடைகள் (புல்லிகள்) கம்பிக்கயிறுகள் முதலியவை நகரத்திலிருந்துவரவேண்டும்.

4. அந்த ஏற்றம் பல வருஷங்களுக்குத் தாங்கும். ஆனால் ஏற்றச்சாலும் (பக்கெட்டும்) கயிறும் அடிக்கடி புதுப்பிக்கப்பட வேண்டியிருக்கும்.

5. எனக்குத் தெரிந்தவரையில் இதில் ஏற்படும் கோளாறுக்குச் சாதாரணமாக கிராமக்கொல்லர் பழுதுபார்த்துவிட முடியும்.

6. திறமைவாய்ந்த மெகானிக் ஒருவரால் தான் அந்த ஏற்றம் ஸ்தாபிக்கப்படவேண்டும். எடை, சாய்வு, முதலியவை கணக்குப்படி சீர்படுத்தப்படவேண்டும் தண்டவாளங்கள் நன்றாகப் பதிக்கப்படவேண்டும். ஜகடையும் சரியான இடத்தில் புதைக்கப்படவேண்டும். ஆனால் சாதாரண அறிவுடைய ஒரு மனிதனை ஏற்றத்தை ஸ்தாபிக்குமாறு சுலபமாயும் துரிதமாயும் பயிற்சி செய்வித்து விடலாம். மெகானிக்கிற்குப் பிரயாணப்படி முதலியவை கொடுக்கவேண்டும். இந்த விவரங்களெல்லாம் கவனிக்கப்பட்டுவருகின்றன.

7. அதிக எடையுள்ள ஒரு ஆண்எருமையை உபயோகிப்பதுதான் மிகவும் சிக்கன வழி. மாட்டின் எடை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அந்த அளவிற்குச் சிரமமின்றி அதிக ஜலம் இறைக்கமுடியும்.

8. ஏற்றச்சாலின் கனத்தால் காலி டிராலி மேலே தூக்கப்பட்டுவிடும்.

9. ஏற்றச்சால் சாதாரணமாக 40 ராத்தல் எடையுள்ளதாயும், டிராலி 100 ராத்தல் எடையுள்ளதாயுமிருக்கும்.

10. இந்த ஏற்றத்தை எத்தனை ஆழத்திற்கு வேண்டுமானாலும், 125 அடிக்குக்கூட உபயோகிக்கமுடியும். சாதாரண ஏற்றத்தை உபயோகிக்கக்கூடிய இடத்திலெல்லாம் இதையும் உபயோகிக்கலாம்.

---

## தென்னாப்பிரிக்கா நிலை.

மிஸ்டர் ஆண்டிரூஸ் டர்பன்நகரம் போய்ச் சேர்ந்தபின் எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறியிருக்கிறார்:—

"மீண்டும் இங்கு வந்து சேர்ந்தது நல்லதுதான். பிரயாணம் அதிகக் கஷ்டமாகவிருந்தபோதிலும் நான் தாமதமில்லாமல் புறப்பட்டு வந்ததைப்பற்றிச் சந்தோஷமடைகிறேன்.

நான் ஸோராப்ஜியுடன் நெ. ௧௧ முதலாவது அவன்யூவில் தங்கியிருக்கிறேன். பீல்டு தெருவில் ௧௧௦-ம் நம்பர் வீட்டை இடித்து நிலத்தை ஐரோப்பியர்களுக்கு விற்றுவிட்டார்கள்!

## மகாத்மாவின் மணிவாசகம்.

"யங் இந்தியா"விலிருந்து மொழிபெயர்க்கப் பட்டது.

ஒவ்வொரு நாளும் வேலை பூராவாக இருக்கிறது. நான் எதிர்பார்த்தபடி அவற்றைத் தவிர்ப்பது அசாத்தியமாகவிருக்கிறது. இந்தியர்கள் வசிக்கும் பாகத்தில் வைசூரி கடுமையாகக் கிளம்பிவிட்டது. வைசூரியால் இறந்தவர்களெல்லாம் இந்தியர்களே. ௧௦௦-க்கு ௬௦ பேர் வீதம் இறந்துவிட்டனர்.

இந்தியர்களையும் அவர்களுடைய சுகாதார வழக்கங்களையும் கண்டித்துப் பத்திரிகைகளில் விஷமத்தனமாக எழுதப்பட்டது. நீங்கள் ஜொஹானஸ்பர்க்கில் செய்ததைப்போல் செய்யவேண்டியிருந்தது. நான் எனக்கு அம்மை குத்திக்கொண்டு, குவாரன்டைனில் வைக்கப்பட்டிருக்கும் இந்தியர்களிடம் தினம் செல்ல அனுமதிக்குமாறு வைத்திய உத்தியோகஸ்தரிடம் அனுமதி பெற்றேன். என்னால் முடிந்தவரையில் அவர்களுக்கு உதவி செய்தேன். அத்துடன் இந்திய சுகாதாரக் கமிட்டி ஒன்றையும் ஏற்படுத்தி டாக்டரின் உத்திரவுப்படி வேலைசெய்வதென்று தீர்மானித்தோம். அவர் எங்களுக்கு வேலை கொடுத்துவிட்டார். இவ்விஷயம் தெரிந்தவுடன் பத்திரிகைகளின் தொனி மாறிவிட்டது. முன்பு எங்கள்மீது பழி கூறப்பட்டதற்குப் பதிலாக இப்போது புகழப்படுகிறது. ஆகவே எல்லாம் நல்லதாகவே முடியும்.

நான் எல்லா விஷயங்களையும் நன்றாக யோசித்து நிலைமையைச் சரியாக உணர அவகாசம் கிடைத்தது. நமது பக்கத்தில் அடுத்த சில வாரங்களில் சிறந்த அபிப்பிராயம் வெளியிடப்படும் பக்ஷத்தில் பத்திரிகைகள் நமக்குச் சௌகரியமாகத் திரும்பும். அதனால் சௌகரியமான நிலைமையேற்பட்டு மகாநாட்டிற்கும் அதிக உதவி கிடைக்கும். மகாநாடு கூடும் சமயத்தில், நன்றாக விஷயத்தை வற்புறுத்துமென்று நம்பி ஒருபெரிய ஆர்ப்பாட்டம் நடத்துவதாக விருப்பதை விட்டுவிடுமாறு செய்வது மிகவும் கடினமாகவிருக்கிறது. சுகாதாரக் கேடாகவிருக்கும் சந்துகளைச் சுத்தம் செய்வது போன்ற திட்டமான வேலை, மற்றெல்லா ஆர்ப்பாட்டங்களையும் பிரசங்கங்களையும் விட அதிகப் பலனை உண்டுபண்ணுமென்று நான் கூறிவந்திருக்கிறேன். கவனம் இன்னொரு வழியில் பூராவும் சென்று வேலையே நடைபெறாமல் சுத்த சோம்பலாக இருப்பதையும் நான் சிறிதும் விரும்பமாட்டேன். ஜனங்களின் படபடப்பையும் ஊக்கத்தையும் சரியான வழியில் திருப்புவதுதான் அவசியமாகும். நம்மிடம் அனுதாபமுடைய சிறந்த ஐரோப்பியர்களுடன்தான் நான் யோசித்தேன். ஒரு வருஷத்திற்கு முன் இங்கு ஹார்த்தலும் பிரார்த்தனையும் நடத்தியது தகுந்த பலனையுண்டுபண்ணியதென்றும் அது ஆத்திரமூட்டுவதாக ஒருவராலும் கருதப்படவில்லையென்றும் அவர்கள் எல்லாரும் ஏகோபித்துக் கூறினார்கள். இந்தியர்கள் தங்கள் வழியிலேயே எல்லாவற்றையும் சரியாகச் செய்து வருவதாக அவர்கள் கூறினார்கள்."

பீல்டு தெருவில் இருந்த வீட்டை இடித்து நிலத்தை ஐரோப்பியர்களுக்கு விற்ற விஷயம் பழய ஞாபகங்களைக் கிளப்புகிறது. அது மிகவும் பழமையான சொத்துக்களில் சேர்ந்தது. காலஞ்சென்ற ஹாஜி அபுபக்கர் ஆமது அதை நீண்ட காலத்திற்கு வாடகைக்கு வாங்கியிருந்தார். அவர் தென் ஆப்பிரிக்காவில் குடியேறிய இந்திய வியாபாரிகளில் முதலாவது கோஷ்டியைச் சேர்ந்தவர். காலஞ்சென்ற பார்ஸி ருஸ்டம்ஜிக்கு அது உள்வாடகைக்கு விடப்பட்டிருந்தது. அவர் இறக்கும் வரையில் இது அவர்வசமேயிருந்தது. அது ஒரு பொது இடத்தைப் போலிருந்ததே ஒழிய தனி ஸ்டோராயில்லை. இந்தியர்களுடைய கூட்டங்கள் பெரும்பாலும் இங்குதான் நடத்தப்பட்டன. எல்லா முக்கியமான தீர்மானங்களும் அங்குதான் செய்யப்பட்டன. கோகலே தமது காலத்தில் பெரும் பாகத்தை அங்குதான் கழிப்பார். ஆண்டிரூஸ் அங்குதான் வேலைசெய்தார். ஏழைகள் பணக்காரர்கள் ஆகிய எல்லாருக்கும் அது தங்குமிடமாகவிருந்தது. அது ஒரு உண்மை தர்மசாலையாகவே இருந்தது. வாடகைச் சீட்டின் காலம் முடிந்ததும் டர்பன் நகர கவுன்சில் குத்தகையைப் புதுப்பிக்க மறுத்துவிட்டது. இந்தியர்கள் ஏலம் கேட்கக்கூடாதென்ற நிபந்தனை விதித்துவிட்டு நிலத்தை அதுஏலம்போடப்பட்டது. அந்தஇடம்இந்தியர்களுக்குப்புனிதமானதென்று டர்பன்கோர்ப்பொரேஷனுக்குத் தெரியும். ஆனால் ஐரோப்பியர்கள் வசம் அது போய்ச்சேருவதை இந்த அறிவு தடுக்கவில்லை. அதனால்தான் மிஸ்டர் ஆண்டிரூஸ் இதைக் குறிப்பிட்டு ஒரு ஆச்சரியக்குறி போட்டிருக்கிறார்.

இச்சமயம் அவர் அங்கு போய்ச் சேர்ந்திருப்பது தெய்வச்செய்கையாகும். வைசூரி அதிகமாகப் பரவியதால் ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் கலகமாகக் கிளம்பிவிட்டிருக்கும். ஐரோப்பியர்கள் மிகவும் அபாயகரமான வழியில் கண்டிப்பான ஏற்பாடுகளைச் செய்திருக்கலாம். இந்தியர்கள் அதனாலேற்படும் பயத்தால் நடுங்கிச் செயலற்றுப்போயிருக்கக்கூடும். மிஸ்டர் ஆண்டிரூஸ் துரிதமாகச் செய்த ஏற்பாடுகளின் பலனாக, ஒரு பெரிய துக்ககரமான நிலைமை தவிர்க்கப்பட்டுவிட்டது.

தெய்வத்தன்மை வாய்ந்த அந்த மனிதர் அங்கு இருப்பதால் தாசு இந்தியர்கள் பக்கம் திரும்பக்கூடும். மகாநாட்டின் மூலம் அதிகமாக எதிர்பார்க்கலாகாதாயினும் இந்தச் சிக்கலான பிரச்னையைப்பற்றி யோசிக்கச் சௌகரியமான ஒரு நிலைமையை அவர் உண்டுபண்ணிவருகிறார். ஸர் மகமது ஹபிபுல்லாவின் தலைக்குப் பெரிய பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது. பொது ஜனங்களின் ஏகோபித்த ஆதரவை அது பெற்றிருக்கிறது. நன்மையே விளையுமென்று பிரார்த்திப்போம்.

---

## கவியின் பூந்தோட்டம்.

[காலஞ்சென்ற W. C. பானர்ஜியின் புதல்வி ஸ்ரீமதி, ப்ளேர் என்னும் அம்மையார் கவீந்திரரின் சில சொல்—மலர்களை மொழிபெயர்த்து எனக்கு அனுப்பியுள்ளார். கவியின் மருகியார் ஸ்ரீமதி பிரமாத சௌத்திரி என்பாரால் இவை மொழி பெயர்த்தெழுதப்பட்டன. முன்னுரையாக, ஸ்ரீமதி ப்ளேர், எழுதுவது:—

"ஆங்கிலத்தில் தினசரிக் குறிப்புக்களாக உதவும் வாக்கியங்களைப் போன்ற வங்கமொழி வாக்கியங்களை ஸ்ரீமதி ப்ரமாத சௌத்திரி எனக்காக வங்கபாஷையில் எழுதினார். இவை அவ்வப்பொழுது கவீந்திரரால் சாந்தி நிகேதன ஆச்சிரமத்தில் செய்யப்பெற்ற பொருட்பொழிவுகளினின்றும் தொகுக்கப்பெற்றுள்ளன. கவியின் பொருட்பொழிவுகள் உடனுக்குடனே எழுதப்பெற்றன. ஆனால் இவை இன்னும் அச்சுவாகன மேறவில்லை. இவ்வாக்கியங்கள் எனக்கு மிக்க இனிமையாக இருத்தலால் நான் இவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பிக்குமாறு ஏற்பாடு செய்தேன்."

'யங் இந்தியா' வாசகர்கள், கவியின் பூந்தோட்டத்தினின்றும் வந்துள்ள இம்மலர்களைப் பொன்போல் போற்றுவர் என்பது என் துணிபு. எம். கே. காந்தி.]

அன்பெனும் திருவளர் தாமரை எண்ணிறந்த இதழ்களோடு பொலிகின்றது. தன்னலத்தினின்றும் இது அரும்பி, படிப்படியாக, இதழ் இதழாக விரிகின்றது. தன்னலம் குடும்ப நலமாக, குடும்ப நலம் சமுதாய நலமாக, சமுதாயம் தேசமாக, தேசம் மக்கட்குலமாக விரிந்து பரந்து, இவ் அன்பு இயற்கையினையும் அப்பாலுள்ள இறையொளியினையும் தழுவி நிற்கின்றது. இதுவே இவ் அன்பெனும் நறுமலரின் நல் வளர்ச்சியாகும்.

இவ் உலகப் போக்கிலே சட்டமுண்டு, ஒழுங்குண்டு. இம்முறையினைக் கண்டு கொள்ளாத அறிவு ஆற்றலில்லாதது, பயனற்றது. அது வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் தோல்வியுறுவது.

ஜட உலகிலே ஸ்தூல சக்தியினைப் பெருக்கி வெற்றிபெறுவோர் தன்னலப் பற்றை வளர்க்கின்றார்; ஆன்ம உலகில் வெற்றிபெறும் வீரரோ தம்மையே துறந்து விடுகின்றார்.

ஒருவன் முழுப்பொருளையும் உடனே நோக்கமுயல்வானெனில் அதனை அவன் தெளிவாகக் காண்டில்லை. எனவே முதற்கண் அவன் அதனைப் பகுத்துப் பகுத்து ஆராய்கின்றான். பின்னர் பகுதிகளை இணைத்திணைத்து முழுமையும் காண முயல்கின்றான்.

இந்தியா ஆன்ம உலகிலே அதிகம் சிந்தை செலுத்தியதால் இயற்கையின் மீது தனக்கிருந்த ஆதிக்கியத்தை இழக்கலாயிற்று. எனவே இக்குற்றத்திற்குரிய தண்டனையே நாம் இன்று அனுபவிப்பது.

அவசியத்தால், தேவையிருப்பதால் ஆற்றப்பெறும் செயல் நமது பந்தமேயாகும்; ஆனால் ஆனந்தமாகப் பணியாற்றுவது பந்தமன்று; அதுவே விடுதலை.

மக்கள் நாமே அறிவு, அன்பு, செயல் எனும் முப்பொருளினையும் இசைவித்துக் கொள்ளும் ஆற்றலை எவ்வளவுக்கெவ்வளவு பெறுகின்றோமோ அவ்வளவுக் கவ்வளவு பேரின்பத்தினை நாம் அனுபவிக்கின்றோம்.

குடும்பத்தலைவன் குடும்பத்திலுள்ளோரைப் பார்க்கிலும் அதிகமாக, அக்குடும்ப நலத்திற்குரிய விதிகளையும் ஒழுங்குகளையும் பின்பற்றி ஒழுகுதல் வேண்டும்.

கருத்துக்களை ஏற்றுக்கொள்ள மனம் மறுக்குமெனின், சொற்களின் முழுப் பொருளும் கவனத்தோடு செவி சாயாத செவிடர்க்குப் புலனாவதில்லை.

வாழ்க்கையின் பெருநோக்கு மிக மிகச் சிக்கலானது. அது மிக மிக விரிந்துளது. அதன் விதிகள் எளிதிற் புலனாகவில்லை. அதன் செயல்களோ செப்பம் தரமல்ல. வாழ்க்கை முறையில் செய்யவேண்டிய தியாகங்களோ மிகக் கஷ்டமானவை.

விளக்கு தன்னொளியைத்தானே மறைத்துக்கொள்வதில்லை. ஓடிச் செல்லாது தேங்கி நிற்கும் குட்டநீர் எப்பொதும் மாசு படருமென்று அஞ்சும் நிலையிலிருக்கின்றது. அவ்வண்ணமே இன்று அடிமை இந்தியாவும் 'தீண்டலெ'னும் அச்சத்திற்கு ஆளாகித் தொடர்ந்து பிரிவு செய்யும் சுவர்கள் எழுப்புவண்ணமாக இருக்கின்றது. இச்சுவர்கள் விரிந்தவெளியுலகினோடு இன்றியமையாது வேண்டிய தொடர்பினை அறுத்து விடுகின்றது. சூரிய ஒளியும் காற்றும் தூரத்தே விலகி நிற்கும்படி இவைகள் செய்துவிடுகின்றன.

ஒழுக்கமெனும் வழியினின்றும் ஒவ்வொரு நாளும் நாம் புனிதம்பெற்றுவருகையில்தான் சொற்களும் பொருள்களும் நமக்குத் துணையாக வருகின்றன. மக்கள் வாழ்க்கை ஜடம் சமயம் ஆன்ம சக்தியெனும் முப்புரங்களிலும் கட்டப்பெறுகின்றது.

நம்முயற்சிகளை வெளிப்பொருள்களின் பால் இழுத்துச் செல்லும் சக்திக்கு நாம் விருப்பமென்ற பெயர் தருகின்றோம். விருப்பத்தின் இலக்கு வெளிப்பொருள். சித்த சக்தியின் இலக்கு நோக்கங்கள்.

விரிந்த இவ் அண்டத்திலே—மக்கட்குலமெனும் இப்பெருவாழ்விலே சட்டவுளுக்கு ஓரிடத்தும் நாம் 'குடிவாழ்க்கை' அளித்தல் இயலாது. ஆசாபாசங்கள் அறக்கப் பெற்றால், மண்ணும் விண்ணும் புனலும் உயிர்க்குலமும் பிறவும், மக்களும் விலங்குகளும்—எல்லாம் எல்லையில் ஆனந்தமயமாகின்றன.

இப்பெருலகின் மையத்தே நான் வந்து நிற்கின்றேன். இது எவ்வளவு போச்சரியமான விஷயம்? இதனிலும் அதி முக்கிய நிகழ்ச்சி பிறிதொன்று மில்லை. விடுதலைக் காதலே இன்பமாகின்றது. முடிவைப் பற்றி ஒன்றும் கூறவேண்டுவதில்லை.

வீண்பேச்சு வீண் செயல்களால் ஒவ்வொரு நாளும் நாம் வீணாக்கும் பிராண சக்திக்கு ஓர் அளவுண்டோ? இறைவனை நோக்கி நாம் திரும்ப எண்ணும்போதுதான் இறையொளி பெறாத நம் அற்ப வாழ்க்கை எவ்வளவு பலமாக நம்மை இழுக்கின்றதென்பதை நாம் உணர்ந்து கொள்ளுகிறோம்.

மரத்தின் முடிவான இலக்கு கனிதருவதன்றோ? அவ்வாறே இவ்வுலகமாகிய மகாவிருட்சத்தின் தேர்ந்த நோக்கு பரிபூரண மனிதனைப் படைப்பதேயாகும். இவ் உலகின் நடுவே இருந்து இறைவன் தன்னை நமக்கு நல்குகின்றான். அவன் பெறவதொன்றுமில்லை. இவ் இறைமைப் பண்பினை மெது ஆன்மா எய்தும்போது அது உண்மை நிலைபெறுகின்றது.

---

